உ

குருவே துணை.

# வாஞெலியில் வண்ணச்சரபர்



வழங்குபவர்கள் :

தவத்திரு. தி. செ. முருகதாச சுவாமிகள்

புலவர், திரு. தி. மு. சங்கரலிங்கம்

திருவாமாத்தூர்.



வண்ணச்சரபம்

## அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள் விழா

## நினைவு மலர்.

1977

உ

குருவே துணை.

# வாஞெலியில் வண்ணச்சரபர்



பாண்டிச்சேரி வாஞெலி நிலையத்தில் நிகழ்த்திய
உரைத் தொகுப்பு.

வழங்கியவர்கள் :
தவத்திரு. தி. செ. முருகதாச சுவாமிகள்
புலவர், திரு. தி. மு. சங்கரலிங்கம்

இஃது
திருவாமாத்தூர், சிரவணபுரம் கௌமார சபையார்
பொருளுதவிகொண்டு பதிப்பித்து
பழனியில் 2—5—77-ல் நடைபெற்ற
வண்ணச்சரபம்-தண்டபாணி சுவாமிகள் விழா
நடைபெற்றபோது வெளியிடப்பெற்ற
நினைவு மலர்.

# இந்நூலைப்பற்றி......

"வானொலியில் வண்ணச்சரபர்" என்னும் இந்நூலுள் பல கட்டுரைகள் உள்ளன இவையனைத்தும் பாண்டிச்சேரி வானொலி நிலையத்தில் ஒலிபரப்பாகியவை சில கட்டுரைகள் திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத் தலைவர் தவத்திரு. தி. செ. முருதாச சுவாமிகள் அவர்களாலும், சில கட்டுரைகள் ஷை கௌமார மடாலயம் திரு. புலவர். தி. மு சங்கரலிங்கம் அவர்களாலும் அவ்வப்போது பேசப் பெற்றவையாகும்.

ஒலி வடிவில் பல அன்பர்கள் கேட்டு மகிழ்ந்த கருத்துகளை, கேட்டு மகிழா அன்பர்களும் படித்துவக்க இன்று நூல் வடிவம் பெற்று வெளிவருகிறது. இக்கட்டுரைகள் அனைத்தும் 19-ம் நூற்றுண்டில் தவமும் புலமையும் தாங்கிய அருட்செல்வராக விளங்கிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் நூற் கருத்துக்களைப் பிற புலவர்கள் கருத்துக்களுடன் ஒப்பிட்டு விளக்குவதாயுள்ளமை காணலாம். இந்நூல் கற்பார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் கருத்துக்களை ஓரளவு உணர்வர் என்பதுண்மை.

இந்நூல் பதிப்பித்து ஷை சுவாமிகள் விழா பழனியில் 2—5—77ல் நடைபெற்றபோது வெளிவருமாறு பொருளுதவி செய்த திருஆமாத்தூர், சிரவணபுரம் கௌமார சபையினருக்கும். நூற் கருத்துக்களை வழங்கிய தவத்திரு. தி செ. முருகதாச சுவாமிகள் அவர்கட்கும், புலவர் – திரு. தி. மு. சங்கரலிங்கம் அவர்கட்கும் நூலாக வெளிவருவதற்கு அனுமதி தந்த பாண்டிச்சேரி வானொலி நிலையத்தாருக்கும் நன்றி தெரிவித்து முருகப்பெருமான் திருவருள் உண்டாக வாழ்த்துகிறோம்.

கோயமுத்தூர்,
2—5—77.

சுந்தர சுவாமிகள்,
கௌமார மடாலயத் தலைவர்,
சிரவணபுரம்.

# * வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

( தி. செ. முருகதாச சுவாமிகள் )

தண்டபாணி சுவாமிகள் என்பார், பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்களுட் சிறந்தவர். தமிழ்ப் புலமையிலும், தவச்சிறப்பிலும், உபாசனையிலும் உயர்ந்தவர். தமிழ்ப்பாடலை இயற்றும் தன்மையை ஆறுவது வயதுமுதல் கைவரப்பெற்றவர். இளமைமுதல் வேற்பூசை செய்தல், ஆறெழுத்தருமறை செபித்தல், தியானம் புரிதல் இவைகளில் தொடர்பு கொண்டவர்.

செந்தமிழ்ப் பாண்டிநாட்டில் திருநெல்வேலியிற் சைவ வேளாளர் மரபில் 28—11—1839-ல் தோன்றியவர். செந்திநாயகம் பிள்ளை, பேச்சி முத்தம்மாள் என்பவர்கள் இவரது பெற்றோர் ஆவர். தந்தையின் நான்காவது மனையாளிடம் காந்திமதி அம்மையின் திருவருளால் இவர் தோன்றினார். நீண்டநாளாக மகப்பேறில்லை என்றிருந்த தந்தை மனம் மகிழத், தண்டபாணி சுவாமிகளாகிய இவரும், இவருக்குப்பின் சித்திரபுத்திரர் என்ற தம்பியும் தோன்றினர்.

எட்டரை வயதளவில் சுரண்டை என்ற ஊரில் இவர் இருந்த சமயம் "பூமி காத்தாள்" என்னும் அம்மன் கோவிலில் நடந்த திருவிழாவின்போது, பலரும் அறியமுடியாதிருந்த அவ்வம்மையின் பெயர்க் காரணம் கூறும் வகையில்,

அமுதம் கடையும்நாள் ஆலம் வெடித்துத்
திமுதமெனத் தீயெரித்துச் சென்ற(து)—அமுதமெனத்
தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்
காத்ததனாற் பூமிகாத் தாள்

என்ற பாடலை முதன்முதலாக இயற்றுவதானார்.

முருகன் அருளால் அதுமுதலாகவே புதியபாடல் இயற்றுவதும், பனையோலைச்சுவடிகளில் அவைகளை எழுதுவதுமான பணியை மேற்கொண்டனர். இவ்விதமாக இவர்

* 20—11—69

பாடிய பாடல்கள் ஒரு லட்சமாகும். முருகன்மீதெழுந்த ஊடல் காரணமாக தம் நூல்களிற் சிலவற்றை நீரிலும், நெருப்பிலுமாக இவரே இட்டழித்தார். அவைபோகத் தற்போது கைவசமிருப்பவை ஐம்பதாயிரம் பாடல்களாகும்.

சூரியன், சிவன், சக்தி, திருமால், விநாயகர், முருகன் ஆகிய அறுசமயக் கடவுளருக்கும், அதீதமான பொதுக் கடவுளுக்கும் பரத்துவங் கூறுமுறையில் தொகை நூலாகவும், வகை நூலாகவும் பல யாப்புகளில் பலநூல் பாடியுள்ளார். சந்தப்பாடல் முதல் எந்தப் பாடலானாலும் ஒரே தடவையில் பாடி, ஓலைச்சுவடியில் எழுதுவது இவர் வழக்கம். அவை வரி வடிவம் கோணாமலும், தனித்தனி எழுத்தாகவும் இருக்கும். அதில் ஒற்றெழுத்துக்குப் புள்ளியும், ரகரத்திற்குக் கீழ்க்கோடும் வரைவது கிடையாது. இது அக்கால முறை. இந்த முறைப்படி அடித்தல், திருத்தலின்றி அழகுறப் பனையோலைச் சுவடிகளில் இவர் எழுதியிருப்பது வியப்பிற்குரியதாகும்.

'வண்ணம்' என்பது அகப்பொருள் துறையில் சந்தக் குழிப்பினால் அமைக்கப்படும் பாடலாகும். இதனை இயற்றுவதென்பது எல்லோராலும் இயலுவதன்று. சந்தத்திற்குரிய சொற்களைச் சிதையாமல் ஓசையுற அமைத்துப் பொருள் கோவைபடப் பாடுகின்ற சிறப்புநோக்கி இவரை 'வண்ணச்சரபம்' என வழங்கினர் புலவர்கள்.

துதிப்பாடலாகச் சந்தப் பாடல்களான திருப்புகழ்ப் பாக்களை இயற்றுவதன் காரணமாகத் திருப்புகழ்ச் சுவாமிகள் என்றனர். இளமைமுதல் முருகன் உபாசனை, வழிபாடு கொண்டிருந்ததால் முருகதாச சுவாமிகள் என்றனர். முழுநீறு பூசி, காவிச்சிற்றுடையுடன் லங்கோடு கௌபீனம் அணிந்து, விரித்தசிகை, கைத்தண்டு, உருத்திராக்க மாலை அணிந்திருந்ததால் தண்டபாணி சுவாமிகள் என்றனர். இவ்வாறு உலகினர் பலவாறு அழைத்தாலும் இவருக்குப் பெற்றோர்களாலிடப்பட்ட பெயர் சங்கரலிங்கம் என்பதாகும்.

சந்தத்திற்கெளத் தனி நூல் சான்றோரால் இயற்றப் படாமை கண்டு 'வண்ணத்தியல்பு' என்ற நூல் ஒன்றையும் தமிழ் எழுத்துக்களின் வரி வடிவம் இத்தகைய தென்பதை விளக்கி எழுத்துமுதல் ஐந்திலக்கணமும் இவற்றைக் கற்பதால் உண்டாகும் 'புலமை' இப்படியிருக்கவேண்டும் என்பதையும் கூறுமுறையில் ஆறாவதாகப் புலமை இலக் கணத்தையும் இணைத்து அறுவகை இலக்கணம் என்ற நூலினையும் இயற்றினர். வடமொழியிலிருந்த திருவா மாத்தூர்த் தல புராணத்தைத் தமிழாக்கம் செய்தனர்.

புலமையிற் சிறந்தவராக விளங்கிய பல தமிழ்ப் புலவர் களில், தெய்வ அருள்பெற்ற புலவர்களைத் தொகுத்து 72 சருக்கங்களில் மூவாயிரம் பாடலில் புலவர்புராணம் என்ற காவிய நூலைச் செய்தருளினர்.

சென்னை – கந்தகோட்டம், தேவகோட்டை, பழனி, சிதம்பரம் பாண்டிநாயகம் என்ற தலங்களின் முருகன் மீதும், திருச்செந்தூர் வள்ளிநாயகி மீதும் ஐந்து பிள்ளைத் தமிழ் நூல்களும், கலம்பகங்களும் பல செய்தனர். மருத்துவ முறையை விளக்குமுறையில் வாகட பிள்ளைத் தமிழொன்றும் இயற்றியுள்ளனர். திரிபு, யமகம், ஏகபா தம், இதழகல், அந்தாதிகள், வேறு பல அந்தாதிகள் செய்ததுடன், அரி ஏகபாதம், சிவன் ஏகபாதம் என்ற நூல்களை அருளி அதன் உரையையும் எழுதிவைத்துள்ள னர். நிரோட்டம் என்பது உதடுகள் குவிந்தும், ஒட்டா மலும் உள்ள தமிழ் எழுத்துக்களைக்கொண்டே பாட வேண்டும் என்பது முறை.

நிரோட்டம் என்ற அச்சொல் உதடுகளை ஒட்டுவதா யிருப்பதை அறிந்த தண்டபாணி சுவாமிகள், அந்நூற் பெயரும் உதடுகள் ஒட்டாத சொல்லாக இருக்கவேண்டும் சொற்பொருளும் எளிதில் விளங்குவதாயிருக்கவேண்டும் என்று கருதி இதழகல் என்ற பெயரை வைத்தார். சென்னை, தில்லை, நெல்லை, அரங்கம் என்ற தலங்குறித்து இம்முறையில் இதழகல் அந்தாதிகள் செய்தருளினர்.

வடலூர் இராமலிங்க அடிகள், வளவனூர் சண்முக சுவாமிகள், யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், திரிசிரபுரம்

மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முனிவர், வேட்டவலம் ஜமீன் சர்க்கரைப் பண்டாரியார், அட்டாவதானம் கலியாணசுந்தர யதீந்திரர் போன்ற பெருந்தகையினர்களும், புலவர்களும் இவரோடு தொடர்பு கொண்டு வாழ்ந்தனர்.

இவரை ஆசிரியராகக்கொண்டு சந்த இலக்கணம், வண்ணம் பாடங்கேட்டவர்கள் பலர். ஆறெழுத்தருமறை உபதேசம் கேட்டு இவரைக் குருவாகக்கொண்டவர்கள் பலர். அவருள் சிறந்து விளங்கியவர் கோவை — சிரவணபுரம் அருள்மிகு இராமானந்த சுவாமிகளாவார். முருகன் காட்சியைத் தூலக்கண்முன் காண விரும்பிய தண்டபாணி சுவாமிகள் திருமலையென்னும் பாண்டிநாட்டு முருகன் தலமான மலைக்கோயிலிற் சென்று வேண்டினர். அவ்வாறு எய்தப்பெறாமையால் முருகன் சந்நிதி முன் னிருந்து உருண்டனர். உடலில் ஊனமின்றி அவனருளால் காக்கப்பெற்றனர்.

புதுவையில் அமைச்சராயிருந்த தானப்ப ஆசாரி என்பவர் இவரிடம் அன்பு பூண்டு வாழ்ந்தார். கண்ணுவ ஐயர் இவரது பாடலில் உள்ளம் ஊறிய அன்பரானுர். பின் ஒருசமயம் சுவாமிகள் புதுவை வந்தபோது தானப்ப ஆசாரியார் மறைந்தனரென்பதறிந்து மனம் வருந்தி ஓர் பாடலோதி அவர் பெருமையை விளக்கினர்.

மானப் புலவர் மகிழ வழங்குசெங்கைத்
தானப்ப னில்லாத் தனிப்புதுவை—வானத்தில்
எல்லாப் பொருளும் இருந்தும் இலங்குதிங்கள்
இல்லாத தன்மைஒத்த தே.

பாண்டிச்சேரியில் உள்ள வேதபுரீசுவரர், வரதராசப் பெருமாள்மீது துதிப்பனுவல் பல பாடினர். முருகப் பெருமான்மீது திருப்புகழ்மாலை என்ற நூல் இயற்றினர். அன்றிரவு முருகன் சுவாமிகள் மனவெளியில் தோன்றி, உன் பாடலால் என் முகம் ஒன்றே மகிழ்ந்தது. மேலும் ஐந்து நூல் பாடி மகிழ்வித்தாலன்றி விடேன் என்றனர். திருவருளாணையை மேற்கொண்டு கலம்பகம், பதாதிகேசம் பிள்ளைத்தமிழ், அலங்கார பஞ்சகம், பதிற்றுப்பத்தந்தாதி

என்ற ஐந்து பிரபந்தம் பாடினர். அன்பர்கள் உதவிய பொருள்கொண்டு வசந்த விழாவைச் சிறப்புற நடத்தினர்.

அருணகிரிநாத சுவாமிகள் பாடிய பூதவேதாள வகுப்பின் சந்த நடையில் திருப்புகழ் பாடும்படி கூறினர். காப்புச் செய்யுளில் அவ்விவரம் கூறி, பெரிய திருப்புகழ் புதுவை முருகன்மீது பாடினர்.

தண்டபாணி சுவாமிகள் அருட்பரம்பரை வளம் பெற்று வாழும்படி அவருக்கு வாழ்க்கைத் துணைவியாராக சுந்தரத்தம்மையாரைப் புதுவையிற் பிறக்கும்படியும், பின்பு அவரைமணந்து அருள்வாழ்க்கை நடத்தும்படியும் முருகன் திருவருள் துணைபுரிந்ததென்பது பாராட்டத்தக்கதாகும்.

திருவரங்கத்திருவாயிரம், பழனித் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம் எனவும், பொதுவான கடவுளைக் குறித்துத் தெய்வத் திருவாயிரமும், சண்மதமும், சமயாதீதமுமான ஏழு சமயங்களைக் குறித்து ஏழாயிரப் பிரபந்தமும் இயற்றினர்.

திருவள்ளுவர் அருளிய திருக்குறளை அடியொற்றி 'மறுநெறித் திருநூல்' என்னும் நூலை நூற்று முப்பது அதிகாரங்களில் 1300 குறட்பாக்களிலும், தமிழ்மொழி அக்கர வரிசையில் மொழி முதலில் வராத எழுத்துக்கட்கு இனமாக உயிரெழுத்தைத் தொடர்பு செய்து 'வருக்கக் குறள்' என 247 குறட்பாக்களிலும் அருளினர். முத்தமிழின் ஒன்றான இசைத்தமிழ் வரிசையில் பல கீர்த்தனைகளும் நாடகத் தமிழ் வரிசையில் முசுகுந்த நாடகமும் இயற்றினர்.

வடமொழியே உயர்வென்று வேலூரில் நடந்த வாதத்தில் இவர் கருத்துப்படியே "தமிழ் மொழியே உயர்வு" எனத் திருவுளச் சீட்டின்மூலம் கிடைத்தது. தமிழின் சிறப்புகளைத் தொகுத்து உடனே 'தமிழலங்காரம்' என்ற நூல் செய்தனர். எப்புலவராலும் பாடாதிருந்த ஒலியலந்தாதியைப் பாடிய தண்டபாணி சுவாமிகள் முதலொலியலந்தாதி, பேரொலியலந்தாதி, நடுவொலியலந்தாதியும் பாடிய சிறப்பைப் பெற்றார்கள்.

உயிர்க்கொலை, புலால் உணவு எம்முறையிலும் கூடா தென்ற தீவிரக் கொள்கையரான இவர், பசுக்கொலை புரிந்து அரசு நடத்திய ஆங்கில அரசு நீங்கவும், தமிழரசு வரவும் விரும்பிப் பல கீர்த்தனைகளும், ஆங்கிலேயர் அந்தாதியும் பாடினர். எல்லாச் சமயமும் கௌமார சமயத்துள் அடங்கும் என்ற கொள்கையுடைய சுவாமிகள் கௌமார சமயத்தை விளக்கிப் பல நூல்கள் இயற்றி யுள்ளார்கள். சிவசுந்நியாசத்தை மேற்கொண்ட தண்டபாணி சுவாமிகள் நடுநாட்டுச் சிவதலமான திருவாமாத்தூரில் இறையருளாணையின்படி எல்லோதாண்டா விரதமுடன் தங்கித் தவம்புரிந்து 5—7—1898-ல் அருட்சமாதி கொண்டனர்.

தண்டபாணி சுவாமிகள் சமாதிக்கோவில், அவர் பாட லைமக்க ஏட்டுச்சுவடிகள், கௌமார மடாலயம் ஆதியன சுவாமிகள் பரம்பரையினரால் காக்கப்பெறுகின்றன.

---

## *மன ஒருமைப்பாடு

(தி. மு. சங்கரலிங்கம்)

உண்மை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் உலகில் பிற மக்களைப்போல வாழ்ந்தபோதிலும், உலகியலிற் காணப் படும் பற்றில் தோயாமலும், மயங்காமலும் வாழ்வர். உண்மை ஞானம் கைவரப்பெறாதவர்கள் உலக மாயையில் அழுந்தித் தவிப்பர்.

தண்ணீரில் நீந்தத் தெரிந்தவன் எவ்வளவு ஆழ முள்ள நீரிலும் நீந்திச் செல்வான். நீந்தத் தெரியாதவன் தண்ணீரில் அமிழ்ந்தி வருந்துவான். அவ்வாறு அமிழா மல் நீந்திக் கரை சேரவேண்டுமானால் தெப்பத்தின் துணை தேவைப்படுகிறது.

தெப்பம் போன்றது மனம். இதன் துணையால் ஆற் றைக் கடக்கவும் கூடும், அமிழவும் கூடும். அம்மனமாகிய தெப்பத்தைச் செயல்படுத்தும் முறையில்தான் இருநிலை யும் ஏற்படுகிறது.

---

* 29—6—68 சான்றோர் வாக்கு.

மனத்தின் வழியே செல்வோனை மாயை அமிழ்த்தி விடும். மனதைத் தன் வசப்படுத்தினல் மாயையைக் கடக்க உதவும். மனதைக் குரங்கோடு ஒப்பிடுவர் ஞானிகள். அதுபோலவே மனமும் ஐம்பொறி வழியே ஓடிப் புலன் நுகர்ச்சியை விழையும். அவ்வாறு பொறி வழியே ஓடும் மனத்தை அடக்கித் தெய்வ உபாசனை வழியே திருப்புவதுதான் நல்லறிவுடைமையாகும். இதனையே

> சென்ற விடத்தால் செலவிடா, தீதொரீஇ
> நன்றின்பால் உய்ப்ப(து) அறிவு

என்ற குறள்மூலம் அறிவுறுத்துகின்றார் திருவள்ளுவர் பெருமான்.

மனதை நல்வழியில் திருப்புவது என்பது அவ்வளவு எளிய காரியமன்று. ஆதலால் அதன்வழியே ஓடவிட்டுத் திருப்புவதுதான் அதற்கேற்ற வழி. இவ்விதம் செய்வதுவே மனம் புலன் நுகர்ச்சியை வெறுக்க வழியாகும். மேலும், அம்மனத்தை நன்னிலையில் இருத்தவேண்டும் போது, மனத்தை நோக்கிக் குருஞானசம்பந்தர் சிவபோக சார நூலில்

> ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைசெய்யாய்
> நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்—சீசீ
> சினமே தவிராய், திருமுறைகள் ஓதாய்
> மனமே உனக்கென்ன வாய்.

என்று, வழி கூறும் சான்றோர் வாக்கை உட்கொண்டு அடக்கிப் பணிகொள்ளவேண்டும்.

நூல்பல கற்றாலும் பயனில்லை. மனதை அடக்கக் கற்றுக்கொள்ளவேண்டும் என்பதனை,

> சினமடங்கக் கற்றாலும் சித்தியெலாம் செய்தாலும்
> மனமடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே

என்று நினைவு படுத்துகின்றார் தாயுமான அடிகள்.

மேலும், ஒருவனைத் தாழ்நிலையிற் கொண்டுபோய் கெடுக்கக்கூடியதும், தாழ்நிலையிலிருந்து மேல் நிலைக்குத் கொண்டுசேர்க்கக் கூடியதும் மனமேயாகும். ஆதலால் அம்மனத்தை அதன் போக்கில் அலையவிடாமல் அடக்குவதில் திறமைபெற்றவன் பிறவிக் கடலையும் கடக்கவல்லவனாக விளங்குவான் என்பதை,

கெடுக்க வல்லதும், கெட்டவர் தங்களை
எடுக்க வல்லதும், இம்மனம் என்(று)அதை
அடக்க வல்லவன், ஐய பவக்கடல்
கடக்க வல்லவன், ஆவன் கடிதரோ

என்று சிவப்பிரகாச அடிகள் அருளும் வாக்கால் அறிய முடிகிறது.

முரட்டு இயல்பமைந்த பிள்ளைகளையோ அல்லது பிராணிகளையோ நல்லியல்பில் பழக்க எண்ணும் ஒருவன், அதன் முரட்டுப் போக்கிலேயே சென்று, பின், தான் எண்ணிய நல்லியல்பில் திருப்புவதுபோலவே மனத்தையும் திருத்துவதே நன்மையைத் தருவதாகும்.

தோன்றி, நின்று, அழியும் உலக ஆசையினின்றும் மாற்றி தெய்வ உபாசனையிற் பழகுதற்குத் தியான சிந்தனையில் முயலவேண்டும்.

உபாசனை என்றால், மனதிற்கினிய தெய்வ உருவை நாம் வெளியிற்கண்டு மகிழ்வதுபோல அகத்திற் கண்கொண்டு பார்ப்பதும், ஆனந்திப்பதுமாகும். வெளியிற் செய்யும் வழிபாட்டினைப்போலச் சிந்தனை செய்து மனத்திற்கு வேலை தருதல் வேண்டும்.

அவ்வாறு தியான சிந்தனையில் திருவுருவத்தைத் தியானிக்கும்போது, மனதுக்கு முழு வடிவம் புலனாகாது. ஒவ்வொரு அவயவமே தெரிந்து மறையும். இப்படிப் பயிற்சி செய்துகொண்டேவரின் முழு வடிவம் புலனாகி மனம் ஒருமைப்படும் ஒருகணம் அப்படி நின்றாலும் அதனால் வரும் பேரின்பம் அடவிட முடியாதது என்பர். தியானத்தின் அநுபூதியைக் கௌமார முறைமை என்ற நூலில்,

ஒருருவந் தனைமுதலிற் றியானிப் போர்க்கு
ஒவ்வோர்அவ யவம்தோன்றும், ஒருங்கு தோன்று(து)
ஆருயிர்தத் தளிக்கமனம் சிதறி ஓடும்,
அனந்தவிக சங்கற்பம் அடிக்காய் தோன்றும்,
பூருவபுண் ணியபலத்தால் மாறி மாறிப்
பொருத்திமிகப் பாடுபடுர் புண்ணி யோர்க்கே
ஊரும்எறும் பாற்கருங்கல் குழிந்தாற் போல்ஆங்(கு)
ஒருவாறு நிலைத்தின்பம் உதிக்கும்... ..

என்று புலவர் புராண ஆசிரியர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அழகுபடக் கூறுகிறார்.

எக்கடவுட்கு எவர்அடிமை பூண்டுற்றாலும்
எனக்கதுசம் மதம்முடிவில் ஏகந் தானே

என்ற அச்சான்றோர் வாக்கின்படி, எம்மதத்தினராலும் தத்தமக்குரிய மூர்த்தியின் திரு உருவைத் தியானத்தினால் சிந்தித்து, மனத்தை அடக்கி, அரிய பிறப்பான மனிதப் பிறவியின் பயனை அறிந்துய்தல் கடமையாகும் அல்லவா.

---

# *வழிபாடு

(தி. மு. சங்கரலிங்கம்)

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிது அரிது", "அரிது அரிது மானிடராதல்" என்றெல்லாம் மனிதப் பிறவியின் மாண்பைக் குறித்து ஆன்றோர்கள் பலவாறு கூறியுள்ளனர்.

உயிர்கட்குப் பிறப்பு என்பதெல்லாம் ஒன்றுதான். அவ்வாறிருக்க, மக்கட் பிறப்பைப்பற்றி மட்டும் ஏன் அவ்வாறு அருமை பாராட்டினர்? அதற்கொரு காரணம் இருக்கவேண்டுமல்லவா? அக்காரணத்தை விளக்குகின்ற முறையில்,

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும், சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்

என்று திருவள்ளுவர் கூறுகின்றார். அதுமட்டுமல்ல,

மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக

என்பதும் அருளாளர்களின் துணிபாகும். எனவே இறைவனை வணங்கி அவனருளைப்பெறவே இப்பிறப்பு எய்தியுள்ளது என்பது நன்கு விளங்குகிறது.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்,
தாழ்த்த சென்னியும், தந்த தலைவன்

என்று கூறியருளிய அப்பரடிகள், ஒவ்வொரு அங்கத்தையும் இறைபணியில் ஈடுபடுத்தித் திருஅங்கமாலையில் கூறி

* 1—7—68 சான்றோர் வாக்கு.

யருளியுள்ளார். அத்தகைய அரிய மனிதப்பிறப்பை நாமாகப் பெறவுமில்லை. இறைவன் கருணையால் அளித்ததாகும். அந்தக் கருணைக்கு நன்றியறிவிக்கும்வகையில், நாம் கடவுள் வழிபாடு செய்யவேண்டியது முதற்கடமையாகும்.

யானை, நாரை, பசு, சிலந்தி போன்ற அஃறிணை இனங்களும் இறை வழிபாடுசெய்து நற்கதிபெற்றதை அறிந்திருந்தும், மனிதன், தனது கடமையைமறந்து உலக ஆசைகளிற் சிக்கி, வீணே உழன்று,

பூக்கைக் கொண்டுஅரன் பொன்னடி போற்றுமலும்,
நாக்கைக் கொண்டுஅரன் நாமம் நவிலாமலும்,
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து,
காக்கைக் கேஇரை யாகிக் கழிந்து,

வாழ்நாளை வீணைக்குதல் பயனற்றதாகும்.

இறப்பு என்பது எல்லோருக்கும் உண்டு என்றாலும், அது எப்போது வரும் என்பது நாமறியாததொன்றாகும். ஆகவேதான் உயிர்க்கு உறுதி தருவதான இறை வழிபாட்டின் முக்கியத்தை,

காலன் வருமுன்னே, கண்பஞ் சடையுமுன்னே,
பாலுன் கடைவாய் படுமுன்னே—ஞாலமிசை
உற்றார் அழுமுன்னே, ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

என்று பட்டினத்துச் சுவாமிகள் அறிவுறுத்துகின்றார்.

வாழ்க்கைக்கேற்ற வசதிகளைச் செய்துகொள்வதில் நமக்குள்ள ஆர்வத்தைப்போலவே, இறைவன் வழிபாட்டிலும் நமக்கு ஆர்வமிருக்கவேண்டும். வைகறையில் நீராடி, உள்ளத்தைப் பக்தியில் ஈடுபடுத்தி, விளக்கிட்டு, மலர் தூவி, வழிபடவல்லோர்கட்கு, இறைவன் கருப்பஞ்சாற்றிலே உண்டாகும் கட்டிபோல எளிதாகத்தோன்றி அருள் புரிவான் என்ற கருத்தை,

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி,
அரும்பொடு மலர்கள் தூவி, ஆர்வத்தை உள்ளே வைத்து,
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல் லார்க்குக்
கரும்பினில் கட்டி போல்வார் கட வூர் வீரட்ட னாரே.

என்று தாண்டகவேந்தர் சாற்றியருள்கின்றார்.

நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டருளும் இறைவன், நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, ஊற்றெழும் கண்ணீரதனால் உடம்பு, நனைந்து நனைந்து, அருளமுதே! என்றெல்லாம் கூறி, நெக்கு நெக்கு நினைந்து போற்றும் அடியார்களின் உள்ளத்தே எழுந்தருள்வான். அவ்வாறின்றி மனத்தில் தூய்மை இல்லாமல், உலகினர் மதிக்க, உள்ளன்பை மறந்து ஆரவாரத்துடன் மலர்பெய்து வழிபடும் தன்மையாளரின் வழிபாட்டினைக் கண்டு இறைவன் சிரித்திடுவான் என்பதை

> நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
> புக்கு நிற்பன் பொன்னார்சடைப் புண்ணியன்,
> பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
> நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே.

எனவரும் சான்றோர் வாக்கு அறிவூட்டி நம்மை நல்வழிப் படுத்துகின்றது.

ஆதலால் எச்செயலை நாம் செய்யத் தவறினாலும், இறைவன் திருவடியையும், திருவருளையும் நினைந்துபோற்றும் செயலைமட்டும் மறக்கக்கூடாது. அதுவே சிற்றுயிர்க்கு உற்ற துணையாகவும் அமைந்து, உய்வளிப்பதாகும் என்ற நற்கருத்தைப் புலவர் புராண ஆசிரியர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்,

> எக்கருமம் செய்வதனை விலக்கி னாலும்
> இறைவனைமுன் னிடும்அவற்றை இகழப் போகாது
> அக்கருமமே உயிர்க்குத் துணைய தாகும்
> ஆசாரம், இரக்கம் என்ப தனைத்தும் வேண்டும்

எனவும்,

> தெய்வமொன் றுளதெனத் தேறிப் பணிவது
> மானிடப் பிறப்பில் வந்தோர் கடனே

எனவும் கூறியருளுகின்றார். ஆகவே அரிய மனிதப் பிறவியைப் பெற்றபோதிலும், அவனருளாலே அவன்தாள் வணங்கி நல்வாழ்வு பெற்றுய்வோமாக.



# *நான்கு நெறிச் சிறப்பு

(தி. செ. முருகதாச சுவாமிகள்)

ஆறறிவுடன் மக்களாகப் பிறந்த நமக்குச் சிறப்பாகக் கைக்கொள்ளவேண்டிய கடவுள் நெறியினை வகுத்த நமது முன்னோர்கள் அதற்குரிய நான்கு நிலைகளை முறைப்பட அமைத்திருக்கின்றனர். அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவையாகும். இவை, ஒன்றுக்கொன்று படிப் படியாக உயர்ந்துள்ளன. முதலில் அரும்பு, அரும்பி லிருந்து மலர், மலரிலிருந்து காய், காயிலிருந்து கனி என்ற முறையிலிருப்பதாகும்.

> விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
> அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே

என்றருள்வார் தாயுமான அடிகள். அடிப்படையில் அரும்புபோன்ற சரியையினை முதலிற்கொண்டே கனியான ஞானத்தைப்பெற வேண்டுமென்பதை 'விரும்பும் சரியை' என்ற சொல்மூலம் குறிப்பிட்டார். அவ்விதமான சரியை எது என்பதை திருநாவுக்கரசர் முதலான அருளாளர்கள் கூறியுள்ளனர்.

நிலைபெறுமாறெண்ணுதியேல் என்ற தாண்டகத்தில் நிலையான நல்வாழ்வை விரும்பும் நெஞ்சமே! என மனத்தை விளித்துக் கூறும்முறையில், நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்கு, புலர்வதன்முன் அலகிடுதல், மெழுக்கிடுதல் போன்ற பணிகளைச் செய்க என்றார். இதைத் தொடர்ந்து தல யாத்திரை, தூய நீராடல், கடவுள் நோன்பு கைக் கொளல், சிவகருணை, சாத்திர, தோத்திர நூல்கள் ஓதல் முதலியனவும் வேண்டப்படுவன. இவையனைத்தும் சரியை என்பர்.

கிரியையோ எனில், பூமாலை புனைந்து ஏத்திடுதல், சங்கரா! சயபோற்றி எனத் துதித்தல், இறைவடிவை நிறுவி, தேனொடு நெய் தெங்கிள நீரொடும் — ஆனஞ்சு கொண்டு அபிஷேகம் செய்து வழிபாடு செய்தல் அதியவை யாகும்.

---

* 26—2—69 சான்றோர் வாக்கு.

யோகமாவது, நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவனை கடவுள் திருவுருவை மனத்திற் கருதுதல், அதற்கான நாதன் நாமமாகிய திருமந்திரங்களைச் செபித்தல், புலன் வழியே மனத்தை அலையவிடாமல் தடுத்தல் ஆதியனவாகும்.

ஞானமோ எனில் இறை உணர்வுடன் தான் என்றும், அவன் என்றும் வேறுபாடற்ற நிலையில் பாலும் நீரும் போல் ஒன்றி இருத்தல் ஆதியனவாகும். கடவுள் எப்படி எல்லாவற்றையும் கடந்து உள்ள பொருளோ அதுபோல, ஞானியும் எல்லாவற்றையும் கடந்த நிலையில் விளங்குவான் என்பது பல நூல்களும் கூறி ஒப்பமுடிந்த கருத்தாகும்.

இந்த நான்கின் முதற்படியாவது சரியையாகும். திருக்கோயில் வழிபாடு உயர்ந்தது என்பதை வலியுறுத்தி 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்று ஔவைப்பிராட்டி கூறினர். கோயிலில்லா ஊரில் குடியிருக்கவேண்டாமென்றும் கூறியதும் சான்றோர் வாக்கு. நமது சைவ, வைணவப் பெரியோர்களும், வேறு பல பெரியோர்களும், பெரிய ஞானிகளாய் விளங்கினுலும் தலங்கள் தோறும் சென்று கடவுள் வழிபாடியற்றித் துதித்து விளங்கியதை வரலாற்ருலறிகின்றேம். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் அம்முறையைப் பின்பற்றித் தமது நூல்களிலும் இதனைச் சிறப்பித்தனர். அவர்களைப்போல் தாமும் பல தலயாத்திரையும் செய்தனர். பாடலும் பாடித் துதித்தனர். அதனை

ஆலயத்தின் பணிமுழுதும் சரியை யேயாம்
அதையன்றே சாலநன்றென்(று) ஔவை சொன்னர் என்றும்,

பூவலமாத் தீர்த்தங்கள் பலவும் ஆடிப்
புரதகனன் அரிமுதலாப் புகலும் தேவர்
யாவரையும் ஆலயங்கள் தோறும் சேவித்(து)
ஏன்றமட்டில் மெய்யடியார்க் கேவல் செய்து
பாவமொரு சிறிதேனும் புரிந்தி டாமற்
பலவிரதா திகள்முயன்றுப் பாடு பட்டுச்
சீவர்களுக் கெந்நாளும் இதமே செய்து
திகழ்வதனைச் சரியை எனச் செப்ப லாமே
என்றும் கூறினர்.

இச்சரியையை வற்புறுத்தியே திருக்கோவில் இல்லாத ஊர் திருவில் ஊர் என்றும், இறைவன் திருநாமமான ஐந்தெழுத்தாகிய அருமறை செபியாதவர், அரும்போடு மலர்பறித்திட்டுண்ணாதவர் ஆதியோர் உயர்ந்த மக்கட்பிறப்பினை உடையவராயினும் அவர் வாழும் ஊர் ஊரல்ல, அடவிகாடு என்றும், அவர்தம் உயர்பிறப்பும் பயனற்றதாகிப் பின் இறந்து, பிறந்து படுவதற்குரியதாகும் என்றும் அறுதியிட்டுக் கூறினர்.

நீவேறொன்றிருக்க, நான் வேறொன்றிருக்க என்றும், நீயும் நானுமாய் ஏகபோகமாய் என்றும் கூறினர் முடிந்த ஞானநிலையைப்பற்றி அருணகிரிநாதர், அந்த ஞானம் கைவரும்வரை மனம் ஆசாபாசங்களில் அலைந்து துன்பப் பட்டே இருக்கும். ஆசைகளில் மனதை அலையவிடாமல் தனக்குவமையில்லாதான் தாள்சேர்வதுதான் மனக்கவலை நீக்கும் மருந்து. சரியை ஆதியவற்றால் ஞானமடைவதொன்றே பிறவியை யறுக்க வழிசெய்வதாகும்.

யாக்கை யாற்பயனென், இறை கோயில் வலம்வந்து
பூக்கை யால்அட்டிப் போற்றிஎன் னாதஇவ்யாக்கையாற்
பயன்என்?

என்ற முறையில் ஒவ்வொரு அங்கத்தையும் இறை வழிபாட்டிற்கே எனக் கூறியதுமன்றி

பொக்கம் பேசிப் பொழுது கழியாதே
துக்கம் தீர்வகை சொல்லுவன் கேண்மின்

என்று நம்மைக் கூவி இறைவழிப்பாட்டைச் செய்க எனப் பலவாறு ஓதி நல்வழிப்படுத்தினர் அப்பரடிகள்.

சரணகமலாலயத்தை—அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறை தியானம்வைக்க—அறியாத
சட,கசட, மூடமட்டி—பவவினையிலேசனித்த
தமியன் ... ... ... என்பது திருப்புகழ்.

இவ்வாறு இறைவனை வழிபடக்கூடிய முறையில் உள்ள மனிதப் பிறவியைப்பற்றி—என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே என்றும் கூறிச் சான்றோர்கள் பாராட்டுகின்றனர்.

புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்இறை ஈசனை
நண்ணகில் லாது நழுவுகின் றாரே.

என்று அப்பரடிகள் கூறுவதற்கேற்ப, கடவுள் நெறியைக் கைக்கொண்டும் பிறவிப்பயனை நழுவவிடாமல் அவனருள் பெற்றும் நல்வாழ்வில் அமைவோமாக.

---

## * தவநெறி

(திரு. செ. முருகதாச சுவாமிகள்)

உயிர்கள். முன்செய்த நல்வினை, தீவினைகட்கேற்பப் பல்வேறு வகையாக உயர்ந்தனவும், தாழ்ந்தனவுமான உடல்களைப் பெற்று இன்ப துன்பங்களை நுகர்கின்றன. இவ்வாறு பெறுகின்ற உடல்கள் பலவற்றில் மக்கட் பிறப்பொன்றே உயர்வென்று பல நூல்களும் கூறுகின்றன. நாமும் அதனை உணர்கின்றோம் அல்லவா?

அப்படி உயர்ந்த மனித உடம்பினைப் பெற்றபோது, நாம் செய்யும் தொழில்களும் பல்வேறு வகையில் உளவாகின்றன. அத்தொழில்கள் யாவும் உடல் வாழ்வு ஒன்றுக்கே உரியதாய், உயர்வும் தாழ்வுமாய் அமைகின்றன. தனக்காகவே செய்யப்படும் தொழிலைவிட, தனக்கும் பிறருக்கும் பயன்படும் முறையிற் செய்யப்படும் தொழில் பயனுடையது. "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்ற பாரதியார் வாக்கு அதனை வலியுறுத்துகின்றது. தொழிலும், உழுது செய்யும் பயிர் விளைத்தலும் பல்வேறு வகையில் செய்யப்பெறும் முறையில் வளர்ந்துள்ளன. அப்படி உழவும் தொழிலுமான இருவித உழைப்பால் வரும் பொருளும், தனக்கும் தன்னைச் சார்ந்துள்ள மக்களுக்கும் பயன் தருவதாகவே அமையவேண்டும். மக்கட்கெனச் செய்யப்பெறும் தொழிலோ அல்லது உழவோ மிகமிகக் குறைவாகவே உள்ளன. எப்படிப் பார்த்தாலும் இவை நாம் உலகில் சுகமாக வாழ வகை செய்வதன்றி, நம் உயிருக்குப் பயன் தருவனவாக இல்லை.

---

* 3—3—69 சான்றோர் வாக்கு.

நாம் நம் உயிருக்குப் பயன்தரும் வகையில் செயல் புரியவே இல்லை. "என்று நீ அன்று நான்" என்று தாயுமான அடிகள் கூறுகிறார். நாம் தோன்றிய அன்று முதல் இன்றுவரை நமது ஊன் உடலை வளர்க்க உழைத்து வாழ்ந்தோமேயன்றி, நம் உயிருக்கென எதுவுமே செய்தோமில்லை. இந்த ஊன் உடலையே உண்மையென்றும், நிலையற்ற உலக வாழ்வையே மெய் என்றும் எண்ணி இருந்தோம். ஏன்? இருக்கின்றோம். இப்படி எண்ணற்ற பிறவிகள் பயனற்றொழிந்தன. முற்பிறப்பிற் செய்த நல்வினை காரணமாக இம்மனித யாக்கையைப் பெற்றிருக்கின்றோம். இது இறைவன் கருணையால் தந்ததென்பது நம் முன்னோர் கருத்து. எப்படி எனில், மனிதப் பிறப்பொன்றுதான் நன்மை, தீமைகளைச் சிந்தித்தறிந்து, தக்கதைச் செய்து, தகாததை நீக்கி வாழ வழி செய்கின்றது.

அப்படிச் செய்யாதபோது மக்கட் பிறப்பெய்தியும் பயனின்றி மாக்களோடு ஒப்பாகவே அமையும் என்பது உண்மை. இதனை,

> தக்க இன்ன, தகாதன இன்ன வென்(று)
> ஒக்க நாடி உணர்கில ராமெனில்
> மக்க ளும்விலங் கே......

என வரும் சான்றோர் வாக்காலறியலாம்.

உடலும், உலக வாழ்வும் நிலைபேறுடையன அல்ல. நிலையாகவுள்ளது உயிர் ஒன்றுதான். அதற்கான நன்மையை நாடிச் செய்யும் தொழில் ஒன்றே நமக்காகச் செய்யும் தொழிலாகும். உயிரொன்று வாழவேண்டி உடலால் தொழில் புரிதல் இன்றியமையாததாயினும், உயிருக்காகவும் தொழில் புரிதல் வேண்டுவது அவசியம். அத்தொழில்தான் 'தவம்' என்பதாகும்.

> தவம்செய்வார் தம்கருமம் செய்வார்; மற்றல்லார்
> அவம் செய்வார் ஆசையுட் பட்டு

என்று திருவள்ளுவர் திட்டமிட்டுக் கூறினர். கருமம் என்ற சொல், தொழில் என்ற பொருள்படும். எனவே தவம் செய்யும் தொழிலே சிறந்ததென்பது சான்றோர் கண்ட முடிபாகும். தம் தொழில் தவம் செய்வதொன்றே என்ற அவர், பிற தொழில் அவம் என்றும், ஆசையுட் பட்டது என்றும் விளக்கினர்.

தவம் செய்வதென்பது வயது முதிர்ந்தபோது செய்ய வேண்டுவதுதானே, இப்போது குடும்பத்தைப் பராமரிக்க வேண்டிய கடமையிருக்கின்றதே என்பர் சிலர். தவம் என்றால் எங்கோ வனத்திலிருந்து செய்யப்படுகின்ற கடுமையான தென்பதல்ல. வீட்டிலிருந்து செய்வதும் தவமாகும். தவம் என்பது தெய்வ வழிபாடு, சாத்திர தோத்திர சரித்திர நூற்களை யறிதல், இன்னா செய்யாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, எவ்வுயிரையும் தன்னுயிர் போற் காத்தல், ஒழுக்கம் ஆகியவையாகும். உடல் ஓம்பும் வகையில் தொழில் புரியும்போதும் இறையுணர்வோடு புரிதல் வேண்டும். மனத்தைப் புலன்வழியே செல்லவொட்டாமல் அமைதியுடன் வாழ வகை செய்யவும் வேண்டும். இவையே தவம் என நூல்கள் கூறுகின்றன.

“தூயோமாய் வந்து நாம் தூமலர்த் தூவித் தொழுது, வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்கப் போயபிழையும், புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் என்று செய்யத்தக்கதையும், “செய்யாதன செய்யோம், தீக்குறளைச் சென்றோதோம்” என்று செய்யத்தகாததையும் கூறி “ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி உய்யுமாறெண்ணிச் செய்வதுவே ‘தவம்’ என்றும் திருப்பாவை கூறுகிறது.

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே.

என்றபடி மனதை ஒருவழிப்படுத்துவது தவமாகும். உலகப்பற்றில் எப்படி மனம் பற்றியுள்ளதோ அது போலவே இறைவனிடமும் பற்றுக்கொள்ளவேண்டும். திருவள்ளுவர் கூறியாங்கு தவம்செய்வதே என்ற கருத்தை மேற்கொண்டு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்,

தன்தொழி லாவது தவம்என் றேஎன
வள்ளுவன் ஆதியர் வற்புறுத் தினரே.

என்று தாமியற்றிய நூல் ஒன்றிற் கூறுகின்றார். மேலும், “எக்கருமம் செய்வதனை விலக்கினாலும், இறைவனை முன்னிடும் அவற்றை விலக்கப்போகாது, அக்கருமமே உயிர்க்குத் துணையதாகும், ஆசாரம் இரக்கமென்பது அனைத்தும் வேண்டும்” என்றும் தண்டபாணி சுவாமிகள் கூறுகிறார்.

ஆகவே உடல் வாழ்வுக்கேற்ற தொழில்கள் செய்வதுடன் உயிர் வாழ்விற்கேற்ற தொழிலான தெய்வ வழிபாட்டினை யும் கைக்கொண்டு வாழ்வோமாக.

---

## *யாக்கையின் நிலைமை

(தி. செ. முருகதாச சுவாமிகள்)

இளமைப்பருவம் ஒரு சிறந்த நிலை அதோடு அழகும் ஒன்று சேருமேயானால் சொல்லவாவேண்டும்? அது கண் ணுக்கும் கருத்துக்கும் இனிமை தருவதாகும். தோன்றி நின்றி அழியப்படுவதான உலகிற்பிறக்கும் மக்களிடையே ஒரு சிலரிடமே இந்த இரண்டும் ஒருசேர இருப்பதைக் காண்கின்றோம். இருப்பினும் அது சிலநாளிருந்து மறை வதையும் நன்கு அறிவோம். அந்த அழகும் இளமையும் ஒருங்கே சேர்ந்து நிலைத்து வாழ்பவரில்லை. ஆனால் ஒருவ னிடமே இவ்விரண்டையும் இருப்பது கண்டு புலவர் ஒரு வர் கூறுகின்றார். அவன் யார்? அவர் யார்?

அவர் சங்கப்புலவருள் தலைமையாயிருந்த நற்கீரர். திருமுருகாற்றுப் படையில் "மணங்கமழ் தெய்வத்து இள நலம்" என்றும், "என்றும் இளையாய் அழகியாய்" என்றும் அவர் கூறுவதால் குன்றுதோறாடும் குமரப்பெருமானாகிய முருகக்கடவுள் ஒருவனே, தோன்றிய அன்றுமுதல் இன்று வரை, ஏன்? என்றுமே ஒரு நிலையில் இருப்பவனாகும் என் பதறிகிறோம். முருகன் அன்பரான நற்கீரர் கூறியது வியப்பல்ல, பகையுள்ளத்துடன் போர் செய்த சூரனே முருகனைக்கண்டு வியந்துகூறி நம்மையும் மகிழ்விக் கின்றான்.

"சீர்க்குமரேசன்கொண்ட திருப்பெரு வடிவந் தன்னில்
ஏர்க்குறும் ஒளியும்சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க்குள உலகில் அம்மா! அற்புதத் தோடும் பல்கால்
பார்க்கினும் தெவிட்டிற் றில்லை இன்னுமென்பார் வைதானும்".

என்று பலப்பல கூறுவதைப் பார்க்கின்றோம்.

---

* 12—8—69 சான்றோர் வாக்கு.

எனவே இளமையும் அழகும் உடைய பெருமான் முருகனேயன்றி இரண்டும் யாரிடத்தும் என்றும் நிலைத்திருப்பதில்லை. பாலசூரியனைக் காலையிற்காணும் இளஞாயிறு செம்மையுடன் அழகு தருகிறது. உச்சி வேளையில் வெண்மையாய் வெப்பம் தருகிறது. பின் மாலையில் ஒளிகுறைந்து மறைகிறது என்றால், சாதாரண மக்களிடையே அவையிரண்டும் எப்படி நிலைத்திருக்க முடியும்?

இத்தகு சிறப்புடைய முருகப்பெருமான் தலங்களிற் சிறந்த திருச்செந்தூருக்கு பிறவியிலே ஊமையான குழந்தையுடன் தாய்தந்தையர், பெருமானருள் வேண்டி வந்திருந்தனர். அம்மா அப்பா என்று அழையாமையால் குழந்தையை ஊமையென்றெண்ணினர். இறைவன் புகழைப் பாடுதற்காகக் காலம் பார்த்து மௌனமாக இருந்தது அந்தத் தெய்வக்குழந்தை. ஒருநாள் பெருமழைபெய்தது. மழைநீரில் குமிழிகள் தோன்றின. அவை அழகுடன் சிறிது நேரமிருந்து உடைந்தது. உருவின்றி மறைந்துவிட்டது. இதைக் கண்டதும் மக்களின் உடல் அழகு, இளமை நிலையாமை இதற்கு ஒப்பாகுமென்றெண்ணியது. அடுத்து, கடலில் வரும் அலைகள் பெரிதாகத்தோன்றி சுருண்டு வெண்ணிறமாக விழுந்து தண்ணீருடன் கலந்து மறைந்தன. அலைகளின்பேரொலியும் பெருக்கமும் இடையிலே தோன்றி மறைந்ததுகண்டு மக்களிடையே திடீரெனச் செல்வம் வருவதும் ஆடம்பரமாக வாழ உதவித் திடீரென மறைவதும் இந்த அலைக்கொப்பாகும் என அறிந்தது. குழந்தையுள்ளம்.

ஓடும் மழைநீரில் கைவிரலால் ஏதோ எழுதியது. அவ்வெழுத்தும் உடனே மறைந்துவிட்டது. இது யாக்கை இருப்பதுபோலிருந்து அழிவதை இதற்கு ஒப்பெனக் கருதியது. இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என்ற இந்த மூன்றும் ஒருவன் வாழ்நாளிலறியவேண்டிய முக்கியமெனக் கண்டது. நீர் என்ற தண்ணீர் ஒன்றிலே இம்மூன்றினியல்பும் அமைந்தது. அந்த ஞானக்குழந்தை கண்ட காட்சியானது வீண் பொழுதாக இல்லை. மக்களுக்குக் கூறும் அறிவுரையாகத் தோன்றியது. தான், உலகமக்கள்போலத் தோன்றிய அபிமானம்பற்றி,

உலக மக்களை நமரங்காள் என அழைத்தது. உலகில் இளமை, செல்வம், யாக்கை என்ற மூன்றின் வனப்பிலே மயங்கிக் கெடவேண்டாம். எமது பெருமான் தில்லையம் பலக்கூத்தன் விளங்கும் கனகசபையினிற்சென்று வணங்கி வாழ்த்தாமலிருப்பது ஏன் என்று ஒரு கவி யாடியது.

நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள்! என்னே?
வழுத்தாத தெய்பிரான் மன்று — என்பது பாடல்.

இப்போது இவ்வளவும் எடுத்து அறவுரை பகர்ந்த ஊமைக் குழந்தையார் என்பது விளங்குகின்றதல்லவா? இவர் சீவைகுண்டத்திற்றோன்றி முருகப்பெருமானால் ஆண்டருளப்பெற்று, 'பூமேவு செங்கமலம்' என்று தொடங்கிக் கந்தர்கலி வெண்பாப்பாடிய குமரகுருபர சுவாமிகள் ஆவர்.

மனித வாழ்விற் காணும் நிலையாமை மூன்றுக்கு, நீர் ஒன்றிற் காணும் மூன்று நிலையைக் கூறிய திறம் நம்மைச் சிந்திக்கவைக்கிறது.

"படுமழை மொக்குளிற் பல்காலும் தோன்றிக்
கெடும் இதுஓர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேம்யாம்"

என்று நீர்க்குமிழியின் இயல்பை உடலின் நிலையாமைக்கு நாலடியாரின் கவி அறிவூட்டுகின்றது. மேலும்,

பல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை

என்றும், செல்வம் நிலையாமைக்கு

அகடுறயார் மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்

என்றும் நாலடியார் கூறுகிறது.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று

என்பது திருக்குறள்.

ஆதலால், இளமைப்பருவம் அறியாமையாலும், முதுமைப் பருவம் தளர்ச்சியாலும் பயனற்றுக் கழிவதாகும்.

இடையேயுள்ள எவ்வளப்பருவமே, தலயாத்திரை, புண்ணிய நீராடல், மூர்த்திவழிபாடு, நோன்புமுதலியனசெய்ய ஏற்றதாகும். இது கருதியே, 'நமரங்காள்' என்று குமரகுருபரர் நம்மைக் கூவியழைத்துக்கூறிய அருளுரையைக் கருதி வாழவேண்டும். அதுவே மனிதப் பிறவியைப்பெற்ற பயனுமாகும். இந்த நீர்க்குமிழியின் உவமையை,

> ''மறையவர்கள் - ஆர்க்குமெழிற் செந்தூர் ஆதிபனே என்னுடலம்
> நீர்க்குமிழி ஆய்விடு முன்னே" அருள் என்றும்

மனிதப்பிறப்பின் கடமை வழிபாடு ஒன்றே என்பதை

> ''தெய்வமொன் றுளதெனத் தேறிப் பணிவது
> மானிடப் பிறப்பில் வந்தோர் கடனே".

என்றும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார், எனவே நிலையற்ற இளமை, செல்வம், யாக்கை உள்ளபோதே உயிர்க்கு உறுதி தருவதான இறைவழிபாட்டினைச்செய்து நிலையான இன்பமடைவோமாக.

---

# *அறம் செய்க

(தி. செ. முருகதாச சுவாமிகள்)

ஆசையென்ற ஒன்று நம்மிடம் என்றும் நிலைத்திருப்பதாயுள்ளது. உலகில் வாழும் மற்றைய உயிரினங்களைவிட உயர்ந்த மனிதப் பிறப்பினரான நம்மிடமே அது அளவுகடந்து வளர்ந்திருக்கிறது. நாளைக்கென்று சேமிக்காமல் ஒவ்வொருநாளும் கிடைப்பதை உண்ட அளவில், அமைதியாய்ப் பிறஉயிரினங்கள் வாழ்கின்றன. எவ்வளவு பெருஞ்செல்வமிருந்தாலும் மேலும் சேர்ப்பதிலேயே மனிதன் வாழ்நாள் முழுதும் ஆசையுட்சிக்கி அலைந்து சாகின்றான். அந்த ஆசை தன்னலமாயிருப்பதால் தான் மேலும் மேலும் பிறந்திறக்கின்றான். ஆனால் அந்த ஆசை தன்னலமின்றி உலகப் பொதுநலமாகிப் பிறர்பொருட்டாயிருப்பின் மக்களாற் போற்றப்படுகின்றான். அந்த ஆசை பிறப்பையும் தராது.

---

* 14—8—69 சான்றோர் வாக்கு.

"அவா என்பது எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாப் பிறப்பீனும் வித்து". என்பது திருக்குறள்.

'ஆசையறாய்—பாசம் விடாய்'' என்பர் குருஞானசம்பந்தர். அவர் மனதைப்பார்த்துக்கூறும் அறிவுரை. நமது மனம் ஏதோ ஒன்றில் ஆசைப்பட்டேயிருக்கும். அப்படி எண்ணும் ஆசை எல்லோருடைய இன்ப வாழ்வுக்குரிய பொதுநலமாயிருக்கவேண்டுமென்பதைத் தாயுமானவர்

"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே" என்பதாலறியலாம்.

தன்னலமின்றவரை பொது நலத்துக்காக முயல்வதும், முடியாததை ஆண்டவனிடம் வேண்டிப் பெறுவதும் வேண்டும். "அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும், ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயவேண்டும்" என்று வேண்டுகிறார் வடலூரடிகள்.

இறைவன் பூசை செய்வதில் பேராவல்வேண்டும் "அதை பூசைசெய்யும் பேராசை" என்றும்

"ஆசகல்கிரியா விதிப்பெரு நூல்கள் அறைந்தவாறநுதினம் உனைச்செய்-பூசனைச் செல்வமாயினும் நிறையப் பொருந்திடற் புண்படேன்" என்றும் இறை வழிபாட்டின் உயர்வை வேண்டுகிறார் வண்ணச்சரபம் - தண்டபாணி சுவாமிகள்.

இவ்வாறு பொதுநல ஆசை பலவகையாயிருப்பினும், உயிர்களின் பசியான நோய் தவிர்த்தலொன்றே எல்லா அறத்தினும் உயர்வாகப் போற்றப்படுகிறது. "உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே" என்ற அமுதமொழியால் அதன் உயர்வைக் காண்கிறோம். ஆண்டிமுதல் அரசன்வரை தொடரக்கூடிய நோய், பசிப்பிணியேயாகும். அந்த நோய்க்குரிய மருந்து உணவளிப்பதான ஒன்றுதான். பசி நோய்க்கு உணவான மருந்தின்றி இறந்தவர் எத்தனைபேர் என்பதை யாரறியக்கூடும்?

எல்லோராலும் எளிதிற் காணமுடியாத இறைவனையுங்கூட எளிதிற் காணச்செய்வது பசிப்பிணி தீர்த்தலான அறம் ஒன்றேதான். "அன்னவலையுள் அரன் வந்து சிக்குவான்" என்பது காண்க.

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி

என்பது குறள். தான் பெற்ற செல்வத்தைப் பேங்குமூலம் சேர்ப்பதுபோல உணவளிப்பது ஆகும். அது தேவையான போது பெறப்பொருளை வங்கி தருவதுபோல இவ்வறம் தக்க சமயம் உதவும். இதனை அருணகிரிநாதரும்

உம்மை தேடி வரும் தொழிலையாவழிக்குப் பொதிசோறும்
உற்றதுணையும் கண்டீர் இலையாகிலும் வெந்தது
ஏதாகிலும் பகிர்ந்து ஏற்றவர்க்கே

என்கிறார். உயிரின் பிறப்புக்குரிய இடைவழியில் இரப்பவர்கட்கு உணவு தரும் அறத்தின் பயன், கட்டுச்சோறு போல வந்து துணைபுரியும் என்று தெளிவுபடுத்துகிறார்.

பாத்தூண் என்ற முறையில். தன் உணவிற் பகிர்ந்தாவது பிறர் பசி தீர்ப்பவனைப் பசிநோய் தீண்டாது என்றார், அதைவிட அறம் வேறில்லை என்றும் இருப்பினும் அவை இதற்கு அடுத்த அறமே என்றும் திருவள்ளுவர் கூறுவர். "யாருக்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி" என்பர் திருமூலர். "ஐயமிட்டுண்" என்பர் ஒளவையார். "அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி, அரும்பசி எவர்க்கும் மாற்றி" என்பர் வடலூரடிகள்.

உயிர்கள் யாவும் நம்போன்றன. எல்லாம் இறைவன் மக்கள் என்பதை "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும், இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்" என்றுணர்வது உயர்ந்த ஞானநிலை. இதைப்பெற முயலவேண்டும்.

பசி வந்தபோது மான முதலிய பத்து நற்பண்புகளும் ஒருவனிடம் நிலைத்திராது என்பர் ஒளவையார். இது பொது விதி. உயிரே போவதாலும் தன் பண்பு கெடாமற் பாதுகாப்பது சிறப்புவிதி.

இறந்தாரின் வேறல்ல மன்ற தெளிந்தாரில்
தீமைபுரிந் தொழுகு வார்

என்பது திருக்குறள் கருத்து

தான்கெடினும் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார் கைத்துண்ணற்க

என்பது நாலடியார் கருத்து.

உண்ணார் கைத்து என்பது, தன் உயர்ந்த ஒழுக்கத்துக்கு மாறுபட்டவரது இழியுணவென்பதாம். இதை விளக்க ஒரு சிறு வரலாற்றினை நினைவு கூரலாம்.

இல்லற ஞானியாய், துறவு நெறியினராய் வாழ்ந்து சீவகருணையுடைய முனிவர் ஒருவர், பசிக்காகக் கண்ட விடத் துண்ணாமல், அந்தணரில்லத்திலோ, சைவர் வீட்டிலோ தான் உண்பவர். ஒருநாள் நண்பகல். பசிவேளை. தன் நியம முடித்தபின் உணவு தேடி அந்தணர் வீதியில் வந்தார். நான்கே வீடுகளிருந்தன. மூன்று வீடுகளில் வாய்ப்பு இல்லை. நான்காம் வீட்டை நாடினார். உள்ளிருந்த அம்மையார், யாரும் இதுவரை உணவுதேடி வரவில்லையேயென வெளியே வந்தார். அடிகளைக் கண்டார்: என்ன பார்க்கிறீர்கள் என்றார். அடிகள் உணவுக்காக வந்தேன் என்றார். அம்மையார் அழைத்து அன்புடன் உணவிட்டார். அடிகள் மகிழ்ந்து உண்டபின் அதன் விலைப்பொருள் தர முயன்றார். அம்மையார், என் கணவர் ஆணைப்படி உணவிட்டேன். விலை வேண்டாமென்றனர். அடிகள் வியந்து விடைபெறலானார். அம்மையார், என் மனதில் இரண்டு ஐயமுண்டு. அதைத் தீர்த்துச் செல்ல வேண்டினார். இறைவன் என் அறிவில் விளக்கியிருப்பதானால் சொல்வேன் என்றனர்.

"தருமம் என்பதன் உட்பொருள் என்ன? இறைவனிடம் உயிர்களான நாம் பெறவேண்டியதில் உயர்ந்த பயன் எது என்றனர் அம்மையார். அடிகள் வியந்தார். எல்லாவுயிரும் தன்னைப்போல்வதென்ற உணர்வுடன் இயன்ற உதவி செய்வதே அறம். மற்றுமொரு பிறப்பற்ற முத்தி பெறுவதே மேலான பயனென்றனர். சரியென்று விடை தந்தனர் அம்மையார். இந்நிகழ்ச்சியை ஒரு கவியிற் கூறினார் அடிகள்.

> "நெடுங்குளத்திற் பார்வதியை நேராம் ஓரம்மை
> கொடும்பசியைத் தீர்க்கும் குணத்தாள்—இடும்பரிசு
> வேண்டாதாள் உண்மை விவேகம் மிகவுடையாள்
> ஆண்டாளருளே அவள். என்பது கவி.

அவ்வாறு அருளிய அடிகள்தான் வண்ணச்சரபம்—தண்டபாணி சுவாமிகள் ஆவார். இவர் அந்த அம்மையை

உமையவட்குச் சமமாக எண்ணிய பண்பாடு அறிகிறோம். "பாத்திரமறிந்து பிச்சையிடு" என்பது பழமொழி ஆனால் சுவாமிகள் "பாத்திரம் குறியா அன்னதானம்" என்பர். இதுவே உயிர்களிடத்துக் காட்டும் அன்புநெறி என்பதறிகிறோம்.

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு

என்பது வள்ளுவர் காட்டும் அறமல்லவா.

---

## * விரதம் எது

(தி. செ முருகதாச சுவாமிகள்)

உயிர்களுக்கு அதனதன் புண்ணிய பாவ இயல்புகட்கேற்ப உயர்ந்தனவும் தாழ்ந்தனவுமாகிய உடல்களை அளிக்கின்றான். அவ்வாறு அமையும் உடல்கள் யாவும் கருவில் உருவாகிப் பருவம் ஆனபின் வெளிப்படுகின்றன. அவ்வாறு கருவில் உருவாகும் உடல் மிக நுண்ணிதான உயிரின் வாழ்வுக்கேயாகும். அவ்வுடல், தாய்தந்தைகளின் கூட்டுறவுச் சக்தியால் ஏற்பட்டு, சிறிது சிறிதாகப் பருவுடலாக வளர்கிறது. அதற்கேற்ற உருவ அமைப்புகளும் வளர்ச்சி பெறுகின்றன. அவ்வாறு அவ்வுடல் வளர்வதற்கு உணவு தேவைப்படுகிறது.

அவ்வுணவு எம்முறையில் யார் தருகிறார்கள்? தாத்தான் முடியுமா? உணவில்லாமல் உடல் வளருமா, உயிர் தங்குமா, ஆனால் ஒருவன் இத்தனையும்செய்து தருகின்றான், அவன் யார்? அவனைப்பற்றி நாம் என்றாவது எவ்வளவாவது சிந்தித்தோமா இல்லை. தோன்றாத் துணையாயிருந்து உணவூட்டிக் காத்துவருபவன் இறைவன் ஒருவனே. அவ்வாறு உணவூட்டிக் காத்து வெளியுலகில் உலவவிடும்வரை தாயின் உணவுமூலம் கருவினை வளர்த்து உயிரொடு பிணைத்துக் கருணையாற் காக்கின்றான்.

---

* 3—3—69 சான்றோர் வாக்கு,

இவ்வாறு இறைவன் ஏன் செய்கின்றான். நாம் புகழ்வதற்காகவா, ஏதாவது நம்மாற் கைமாறு கருதியா? ஏதுமில்லை. பின் ஏன் செய்கிறான். தன் கருணை காரணமாகவே தான். வெளியே சிசு பிறந்தபின் நாம் கண்போற் காக்க முயல்கின்றோம். அதுவரை காத்தளித்தவனை நினைக்கவேயில்லை, இதனை

கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கும் மெய்யன். என்பதாலறியலாம்.

கருவைச் சுமக்கும் தாயும்கூடச் செய்யமுடியாத அரிய பெரிய செயல் அது. எனவேதான், "தாயிற்சிறந்த தயாவான தத்துவன்" "தாயினும் இரங்கி என்றனைவந்து ஆண்டருள் – தூயவன்" அன்னையினும் தயைவுடையாய்". "தாயினும் சாலப்பரிந்து" என்றெல்லாம் இறைவனை வாயார அறிந்து போற்றினர் நம் முன்னோர்கள். கருவில் உருவாகும் உடல் – அவ்வவ்வினைத்திற்கேற்ப – வாழ்வுக்கேற்ப அங்க அடையாளம் பிறழாமல், மரபு முறைப்படி திருவருள் ஆணையால் உயிர்கள் தோன்றி வாழ்கின்றன. இப்பெரிய செயலைச்செய்யும் இறைவனுக்கு நன்றியுடையோமாயில்லை.

"மாதா வயிற்றகத்தும் வண்சுவைய ஊன்அளித்த
தாதா ஒருவனே சற்குரு"

என்பர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். பொதுவாக ஊண் அளித்த என்று கூறாமல் "வண்சுவைய" என்ற ஒரு சொல், அந்தந்த உயிரினங்களின் கருவியின் உயிர் வகைக்கேற்ப என்ற அருமையைக் காட்டுகிறது. அந்த அரும் செயலைக் கைமாறு கருதாமற் செய்பவன் இறைவன். எனவே, அப்பெருமானை "தாதா" என்றே சொல்லிப் பாராட்டினர். உலகில் சிறு உதவி செய்பவர்களுக்கும் வள்ளல் என்ற பெயர் வழங்குகின்றனர், நன்றி கூறுகின்றனர். ஆண்டவன் இதை விரும்புகின்றானில்லை. அதை நாம் உணர்ந்து வணங்கவேண்டும்.

"தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே"

என்பது அருள்வாக்கு.

இறைவனை வணங்குதற்குச் சில கட்டுப்பாடுகள் தேவை. இதை "விரதம்" "நோன்பு" என்பர். இதனால் மனம் பொறி புலன்களை ஒருவழிப்படுத்த முடியும். "காப்பது விரதம்" என்ற ஔவை சொல்மூலம் காணலாம். காப்பது என்பது, பொறிபுலன்களை அதன்வழி செல்லாமற் காப்பது என்றும், உயிர்களைக் காப்பது என்றும் கொள்ளலாம். பொதுவாக விரதம் ஒவ்வொரு சமயங்களின் முறைக்கேற்பப் பலவகை விரதம் அமைந்துள்ளன.

வாரத்திற், பட்சத்தில், மாதந் தன்னில்
வருடத்தில் ஒவ்வொருநாள் வகுத்த வண்ணம்
ஈரத்தி னோடுவிர தாதி நோற்றல்
இருமூன்று சமயத்தோர்க்கு ஏற்ற தாகும்

என்பதால் அறியலாம்.

ஆனால் இந்தவகை விரதங்கள் பொதுவானதாகும். சிறப்பாக ஒரு விரதம் இவ்வெல்லாவிரதத்தும் மேம்பட்டதும், உயர்வினதுமாகும். அதுவே கொல்லாத விரதமாகும்.

"கொல்லா விரதம் குறிக்கொண்டோர் நல்லோர் மற்று
அல்லாதார் யாரோ அறியேன்"

என்றே கூறினர் தாயுமான அடிகள். யாரோ அறியேன் என்பதன்றி, பொல்லார் எனவும்கூட அவர்களைக் கூற இசைந்திலர்.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்"

என்றார் திருவள்ளுவர்.

"உயிர்கொலா விரதம் ஒன்றுமே சிறந்தது
உரைக்குமற் றவையெலாம் பொதுவே"

என்றும்,

"கொல்லாத விரதமொன்றே மிகவும் நல்ல
குணமான விரதம், மற்றும் கூறுகின்ற
எல்லாமும் அதனை ஒக்கும் விரதம் ஆகா" என்றும்

கூறுகின்றனர் தண்டபாணி சுவாமிகள்.

"அரிய யாக்கையில் மானிட யாக்கையே ஆக்கை
விரியும் நோன்பினில் உயிர்கொலா விரதமே விரதம்"

என்பர் சிவஞான வள்ளலார்.

"நோன்பென்பது கொன்று தின்னாமை" என்பர் ஔவையார்.

எனவே-விரதங்கள் பலவற்றால், உடல் புனிதமாகிறது. உயிர் இறையருளைப் பெறுகிறது. இவ்விரதங்களை மேற்கொள்வதே, தவம் என்பதாகும். கடவுள் விரதங்களை மேற்கொள்வதும் அவற்றின் அடிப்படையாக – சீவ கருணையைக் கைக்கொள்வதும் நம் கடமையாகக்கொண்டு, இறைவன் பெருங்கருணைக்கு நன்றிசெலுத்துமுறையில் வழிபாடு செய்து இம்மை மறுமை நலங்களை அடைவோமாக.

---

## *ஞான நெறி

(திரு. செ. முருகதாச சுவாமிகள்)

உலகில் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒளிப் பொருள்கள் மூன்று. அவை சந்திரன், சூரியன், நெருப்பு என்பவையாகும். அதுபோல உயிரினது வாழ்வை வளமாக்குவதற்கும் மூன்று பொருள் தேவைப்படுகின்றன. அவை கல்வி, செல்வம், ஞானம் என்பவையாகும்.

இவற்றில் ஒன்று பெற்றோர் சிலர். இரண்டு பெற்றோர் ஒரு சிலர். மூன்றும் பெற்றோர் மிகச்சிலரே யாவர். இவை ஒன்றுக்கொன்று முறையே தரத்தில் மேற்பட்டு விளங்குவதாகும். முன்செய்த நல்வினைப்பயனாலேயேதான். இந்த ஒவ்வொன்றையுமோ மூன்றையுமோ பெறக்கூடும் என்பதை,

> 'கல்வி செல்வம் ஞானம் என்று கழறநின்ற மூன்றும் முன்
> நல்வினைப்பயன் கொடெய்தல் ஞாயம்,அன்றி ஞாலமேல்
> பல்வி தப்படச் சொல்மேன்மைபற்றி யன்று".

என்ற வாக்கினாலறியலாம்.

இவற்றுள் முதலாவதான கல்வி, மக்களுக்கு கண் போன்றதாகும். "இதை எண்ணென்ப ஏனை எழுத்தென்ப–இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு" எனவும், எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும் எனவும்

---

* 5—3—69 சான்றோர் வாக்கு.

கூறிய வள்ளுவர் வாய்மொழியும், ஒளவை அமுதமொழியும் வலியுறுத்துதல் காண்க.

கல்வி கற்பதன் மூலமே மனிதன் மனிதனாகவும் தெய்வமாகவும் வாழ்கிறான். கல்வியை ஒரு கண்ணாகப்பெற்ற மனிதன், மற்றொரு கண்ணாகச் செல்வத்தைப் பெறும் பொழுது அதை நல்வழியில் ஈட்டவும், பிறர்க்கு உதவித் தான் நல்வாழ்வில் வாழவும் வழி செய்கிறது. எனவே கல்வி, செல்வம் என்ற இரண்டும் இரண்டு கண்கள் எனக் கூறினார் முன்னோர்.

கல்விமட்டும் தனியேயிருந்தால் வாழ்க்கையில் வளமிராது. செல்வமட்டும் தனியே இருந்தாலும் அதை நல்வழியிற் பயன்படுத்த வாய்ப்பிராது. 'செல்வத்துப் பயனே ஈதல்' என்பதை அறிவிப்பது கல்வியேயாம்.

" நற்பொருள் நன்கோர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும் " என்பதால்

செல்வமில்லாதவன் கல்வி சிறப்படையாது என்பது தெரிகிறது. பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள என்பது கொண்டு வெறும் செல்வமும் கல்வியுமில்லாதபோது பயன்படாது என்பது புலப்படுகிறது. எனவே கல்வி, செல்வம் இரண்டும் இருகண்களுக்கு ஒப்பென்று கூறினர் மேலோர்.

இனி மூன்றாவதாக ஒரு கண் உண்டு. அது ஞானக் கண் ஆகும். ஞானம் என்றால் அறிவு என்பது பொருள். இந்த அறிவாகிய ஞானக்கண்ணால்தான் அறிவு வடிவான இறைவனைக் காணமுடியும். இந்தக் கண்ணை உடையவர் ஞானிகள் ஆவர். உலகில் ஒருவனைக்கண்டு உனக்கு ஞானமிருக்கிறதா என்று வினவுகின்றோம். அப்போது உலகியலறிவையே குறிக்கிறோம். இவ்வாறு

கல்வியில் வல்லவனைக் கல்வியறிவுடையவன் எனவும், ராக, தாள, லயமறிந்தவனை இசைஞானமுடையவன் எனவும் கூறுகின்றோம். அதுபோல – பதியான இறைவனை அறிந்த ஒருவனை, பதி ஞானமுடையவன் என்பது மரபு. பதியையறிந்தவன் பதியேயாகிறான், நெருப்பிற்

காய்ந்த இரும்பு நெருப்பாய்க் காண்பதும், செயல்படுவதும் போலாகும் என்க.

நீ வேறெனாதிருக்க, நான் வேறெனாதிருக்க, என்பது திருப்புகழ். இறைவனை "ஞானந்தான் உருவாகிய நாயகன்" என்பதும் யானாகிய என்னை விழுங்கி வெறும் தானாய் நிறைகின்றது தற்பரமே. என்பதும் சான்றோர் வாக்கு இக்கருத்தை விளக்கி,

ஞானமென்பது அளவிறந்த விதமாச் சொல்வர்
நவின்றிடுப அத்தனையும் நம்பொனாது எனவும்,

ஞானமென்னும் மொழியினுக்குப் பொருள் ஏதென்னில்
நல்லறிவே எனப்பெரியோர் நாடிச் சொல்வர்
கானமறைப் பொருளறிதல் கல்வி ஞானம்
காதிஒன்றைப் புசியாமை கருணை ஞானம்
தேனவிழ்பன் மலர் சொரிதல் பத்தி ஞானம்
சிந்தித்த படியாடல் சித்தி ஞானம்
நானவன்என் றுரைக்கும்இரு பொருளும் தோய்ந்து
நடுநிலையில் நிற்பதுமெய் ஞானம் ஆமே.

என்று வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தமது கௌமார நூலிற் கூறுகின்றதால் ஞானத்தின் பல பகுதிகளை அறியலாம். இவற்றுள் மேலானது இறைவனுடன் ஒன்றாயும், வேறாயும் தன்னைக்கண்டு பேரின்பமடைவதுவேயாகும் என்பதை சுவாமிகள் விளக்குகின்றார்.

இத்தகைய மெய்ஞானத்தைப்பெற அடிப்படையானது கடவுள் வழிபாடு ஒன்றேயாம். அவ்வழிபாடு சரியை, கிரியை, யோகம் என்ற மூன்று நிலைகளின் வாயிலாக ஞானத்தைப் பெறவேண்டும். இவை அரும்பு, மலர், காய், கனி என்றபடி முறையே பக்குவப்பட்டு மேனிலை அடைகிறது.

"விரும்பும் சரியைமுதல் மெய்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ

என்பது தாயுமான அடிகள் கூற்று. விரும்பும் என்ற ஒரு சொல் அந்த நான்கு நிலைக்கும் பொதுவாக அமைந்து சிறப்புச் செய்வது பாராட்டத்தக்கது. சைவ, வைணவப் பெரியோர்களும், மற்றைய மேலோர்களும் இத்தகைய வழி

பாடு முதலியவற்றைப்பற்றியே ஞானத்திற் சிறந்தார்களாதலால், நாமும் அவ்வகையில் முயன்று பயனடைவோமாக.

---

# * புலவர் புராணம்

(தி. மு. சங்கரலிங்கம்)

புலவர் புராணம் என்பது புலவர்களது வரலாற்றைக் கூறும் நூல் என்பதாகும். புலவர் என்றால் கல்வியில் அறிவுபெற்றவர் என்பது கருத்து. புலவர் என்ற சொல் தேவர்கட்கும் பொருந்தும். இங்கு ஐம்புல வயப்பட்ட இன்பமுடையவர் என்று பொருள் தருகின்றது. புலம் என்ற சொல்லுக்கு 'அறிவு' என்று குறிப்பிடப்பட்டிருப்பினும் நல்லவை இது, தீயவை இது என்றறிந்துகொள்வதற்குக் கல்வியே ஆதரவானமையின் கல்விகற்ற புலமையினரைப் புலவர் என்ற மரபுச் சிறப்புமுறைபற்றி அவர்கள் புலவர் என வழங்கலாயினர்.

புலவர் என்றால் விரைந்து பாடுதல், தடையறச் சொற்பொழிவாற்றுதல் முதலிய நற்செயல்களை உடையவராவர். இத்தகைய பண்பினர் அனைவரையும் தெரிந்துகூற முடியாது என்பதை ''ஆயினும் அவரைச்சொல்லேன்'' என்று கூறுகின்றார் புலவர் புராண முடையார்.

திருத்தொண்டர் புராணத்துக்கு முதல் நூலாக விளங்கும் 'திருத்தொண்டைத் தொகை' அருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், குறிப்பிட்ட காலவரைக்குட்பட்ட சிவனடியவரையே தொண்டர்களாகக் கூறப்பெறுவது போல, வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடும் புலமையுடன் சிறந்த தெய்வ அருளாற்பெற்ற வாக்குப்பலிதசித்தியுடையவர்களைக் கூறுமுறையில் இப் புலவர் புராணத்தை அருளியுள்ளனர். அவ்விதம் கூறவந்த தண்டபாணி சுவாமிகள் அப்புலவர்களின் வரலாறு முறைகளை முற்றும் கூற விரும்பிலர்.

---

* 20—2—70 இலக்கியச்சோலை நிகழ்ச்சி.

ஏன் எனில் தமிழ் கற்று, தெய்வ உபாசனை பெற்று, சொன்னபடி நடக்கும் வாக்குசித்தியுற்று விளங்கும் புலவர்கள் இயல்பை ஓரளவு கூறிப் பின்வரும் தமிழ்ப் புலவர்களை யும் அம்முறையில் உபாசனையும், தமிழ்ப் புலமையும் பெறுமாறு தூண்டி, வழிப்படுத்துவதே குறிக்கொண்டு, இவ்வருமை நூலை இயற்றினர். ஆதலால் சில புலவர்களின் பெயரையோ, அவர்தம் பெற்றோர்களையோ, வாழ்ந்த ஊர் முதலியவற்றையோகூட ஆராய்ந்தறிய முற்பட்டாரிலர். பெரியபுராணத்தும்கூட சேக்கிழார் அடிகள் சிவபெருமான் அன்புத்திறம் ஒன்றையே குறிக்கொண்டு கூறியருளியது இங்கு நினைந்து போற்றத்தகுந்ததாகும்.

தமிழ் மொழியையும், இலக்கண வரம்பையும் உண்டாக்கியவர் அகத்தியரே ஆதலின், அவர் முதற்கொண்டு, சைவம், வைணவம், வீரசைவம், சாத்தேயம், காணபத்தியம், கௌமாரம் ஆகிய சமயப் புலவர்களாக அறுபத்தொன்பது புலவர்கள் சருக்கமும், அதிகம் வழங்கப்படாததும், சிறப்பானதுமான சிறிய வரலாற்றுடன் காணப்படும் பலரைத் தொகுத்துப் பல தெய்வப் புலவர் என்றதொரு சருக்கமும், தெய்விகப் புலமையின்றித் தமிழ்ப் பற்றினால் உயிரையேவிடத் துணிந்த குமணன், நின்றையூர் காளத்திப்பிள்ளை என்பவர்களை அறிவுத் தன்மைப்புலவர் என்று பிரித்து ஒரு சருக்கமும் அமைத்து, இத்தகையவர்களை வரலாற்றால் அறிந்தேன் என்று கூறுகிறார். எனது கண்முன் காண வாழ்ந்த அருளாளர்களில் வடலூர் இராமலிங்க அடிகள், கவி குஞ்சர பாரதி, திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, மாம்பழக் கவிராயர் போன்ற சிலரைக் கண்கண்ட புலவர் சருக்கம் என அமைத்து, இவர்களைப்போல இக்கால மக்களையும் புலமை, உபாசனை வழியில் திருப்பிக்கொண்டு வரவிரும்பி அறைகூவி அழைத்த அருளாளர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளாவர்.

புலமைமட்டுமிருப்பது இனிப்பிலாமலிருக்கும் கற்கண்டையும், உரைக்கு நிற்காமல் நிறமட்டுமுள்ள பொன்னையும்போல்வதாகும். நற்கண்டில் இனிப்பும், கெட்டிப்

பொன்னில் உரைமாற்றம் இருப்பதுபோலவே ஆவதனை அழிப்பதற்கும், அழிவதனை ஆக்குவதற்கும் வலிமைமிக்க சொற்பலிதம் இருக்குமேயானல் புலமை சிறப்புறும் என்பதை ஒவ்வொரு வரலாற்றின் இறுதியிலும் எடுத்துக் காட்டி வலியுறுத்துகின்ருர்.

இந்நூலின் ஆசிரியர் திருநெல்வேலியில் 1839-ல் தோன்றி, இளமைமுதல் வேல் வழிபாடு செய்து, தமிழ்க் கவிகள் இயற்றும் தன்மை வாய்ந்து இலட்சம் பாடல்களைப் பல நூல்கள் மூலம் வழங்கியதோடு அவைகளைத் தாமே பனைஓலைச் சுவடியில் வரைந்தும் வைத்தனர். சீவ கருணை நெறி வளர்த்துப் பல்விதச் சிறப்புடன் தவசீலராக பெரும் புலவராகவும் விளங்கிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் 1838-ல் ஞானசமாதி கொண்டுள்ளார்.

புராணம் பல பாடிய புலவர்கள் பலர். ஆனல் அந்தப் புலவர்கட்குப் புராணம் பாடியவர் இதுவரை யாருமே இல்லை என்பது வெளிப்படை. இக்குறையை நீக்க இப் புலவர் புராண நூலைப் பாடும்படி தூண்டியது முருகப் பெருமான் திருவருளே என்கிருர் நூலாசிரியர்.

தாமிருந்த திருநெல்வேலியிற் பாடத்துவக்கி, இடையில் பற்பல நூல்கள் இயற்றிப் பல்லாண்டுகள் கடந்த பின்னர், திருவாமாத்தூரில் வந்து தங்கியபோது இதனைப் பாடுகிறேன் என்பதை,

நெல்லையினில் துவக்குமிது நெடுநாள் என்
மனக்கருவில் நின்று துன்றும்
எல்லையில்பா மாலையினம் பிறந்ததற்பின்
மாதைநக ரிடத்(து)இந் நாளிற்
குல்லைமலர்க் குகன்கடவ நடைதரும் ......

என்றும், இந்நூலைத் தாம் இயற்றிய காரணம்பற்றிக் கூறும் முறையில்,

நாற்பெயர் யாதெனில் உண்மைப்புலவர் புராணமதாம்
நுவலுமிடம் திருநெல்லைநகர். நுவலும் நிமித்தம்
ஏற்பவருக்(கு) ஈவார்தம் பெரும் புகழும்ஈயார்
இடும்பையும்,செந் தமிழ்ப்புலவர் இயற்புகழும் விளக்கி

நாற்பயனும் பெறவிரும்பல், ஆதாரம் முன்னோர்
நவில்மொழியும், கலைவாணி நடம்புரியும் நாவும்
வேற்பிடித்து மலைதொறும்போய்த் திருவருட்பே றாடல்
விளைக்குமுழு துணர்ப்புலவன் விரைமலர்த்தாள் களுமே

என்றுகூறிய தண்டபாணி சுவாமிகள் திருவருட் செயலால் தான் ஒரு கருவியாக நின்று பாடுகின்றேன் என்று கூறுகின்றார். மேலும் பொதுப்பாயிரம் பாடி முடித்து அடுத்து இதைக் கூறுவேன் என்று கூறாமல் " பொதுப் பாயிரத்தைப் பேசிய மட்டடக்கி, வரு சிறப்புப்பாயிரம் என்றுன்னுகின்றேன், கவிதை வந்தபின் பார்ப்பதென்றன் வழக்கம் உலகீரே " என்றார்.

இதனால் தாம் எடுத்துக்கொண்ட நூலை இப்படித் தான் பாடவேண்டும் என்று திட்டமிட்டோ, ஆராய்ச்சி செய்தோ, எடுத்துக் காட்டுகளை அமைத்தோ எழுத முற்படாமல், திருவருளை முன்னிட்டு அது இயக்கும் பொருளாயும், தான் இயங்கும் கருவியாயும் இருந்தே பாடினேன் என்ற சிறப்பினைப் புலவர் புராண நூலில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுகிறார். எனவே உலகின் வழக்கினதான வரலாற்றையோ, காலத்தையோ கூற முற்படவில்லை என்பது தெளிவாகும்.

புலவர்கள் கூறும் பாடற் கருத்தையும் பாட்டினையும் அப்படியே எடுத்து, அவர் தம் வரலாற்றை விளக்கும் போது, தம் கவியாற் காட்டும் நூலாசிரியர் நயம் பாராட் டத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக ஒன்று காண்போம்.

இரட்டைப்புலவர் கூறுவதாகவுள்ள ஓர் பாட்டு.

தம்பியோ பெண்திருடி தாயாருடன்பிறந்த
வம்பனும் நெய்திருடி மாமனார்—அம்புவியில்
மூத்தபிள்ளை யாரே முடிச்சவிழ்த்துக் கொண்டரே
கோத்திரத்தி லுள்ள குணம்.

எனவரும் அப்பாடலை அவர் வரலாறு கூறும் இரட்டைப் புலவர் சருக்கத்தில் புலவர் புராணத்தில் தண்டபாணி சுவாமிகள் கூறும்போது

" தம்பியோ பெண்திருடி தாயினுடன் பிறந்தவனும் சண்டி மாமன்
கொம்பியலாய்ச் சியர்குலைய நெய்திருடினோன் உனதுகுலத்துக்குள்ள

வம்பிதென நானறிவேன் நீயுமெந்தம் பணம்திருடல் வழக்கேனென்று
தும்பிமுகப் பெருமான்றன் மடிபிடித்தோர் முழுபாட்டும் சொன்னு
னன்றே".

என்று யாப்பிற்கேற்ப பொருளையும், சொல்லையும் மாறு படாமல் விரித்துக் கூறுதல் காண்க, மற்றும்

திருவள்ளுவர் சருக்கத்தில் வள்ளுவப்பெருந்தகை அருளிய குறள் நூலினைச் சிறப்பித்தோதுமிடத்தில், சைவ சமய நால்வர்கள் அருளிய தேவார, திருவாசகப்பாடல்கள் சைவ நன்மக்களால் பெரிதும் போற்றப்பெறும் வேதமாக வும், ஆழ்வார்கள் அருளிய திவ்விய பிரபந்தப் பாடல்கள் வைணவர்களால் பெரிதும் போற்றப்பெறும் பாகவதர் வேதமாகவும் உள்ளன. ஆனல் வள்ளுவர் அருளிய குறள் நூல் சைவ, வைணவ மக்களுக்கேயன்றிப் பிறருக்கும் நல் வழியைக் காட்டும் நீதி நூலாக, வேதநூலாக விளங்கு கிறது என்ற கருத்தை

நால்வர்சொல் சைவர் வேதம், நளிர்குரு கூரான் சொல்லும்
போல்வலார் சிலர்தாம் சொல்லும் பொருவில்பா கவதர் வேதம்
வால்வளை யுலவும் வீதி மயிலைவள் ளுவன்சொல் யார்க்கும்
மேல்வழி உணர்த்திக் கீழ்மை விளக்கும்நல் வேதமாமே.

என்ற பாடல்மூலம் விளக்கிப் பாடுதல் மகிழ்தற்குரிய தாகும்.

இத்தகைய புலவர் புராணத்தை இதுவரை எத்த னையோ பெரிய பல புலவர்களிருந்தும் அவர்களாற் பாட வொட்டாமல் நிறுத்தி, என்னைக் கூறும்படி செய்த திரு வருளை வாழ்த்தி, இப்பெரும் பேற்றினைப்பெற்ற யான் வாழி, என்று வாயாரப் புகழ்ந்து பாராட்டுகின்றனர் தண்டபாணி சுவாமிகள். இதை எண்ணும்போது சேக் கிழாரடிகள் "தேசம் உய்யத் திருத்தொண்டத்தொகை முன் பணித்த திருவாளன், வாசமென்கழல் பரவ வந்த பிறப்பை வணங்குவாம்" என்ற திருவாக்கு நினைவுகூர்தற் குரியதாகும். திருவருள் இன்பத்தில் திளைத்த ஆன்றோர் களின் வாக்குகளில் இவ்விதம் ஒற்றுமைக் கருத்துகளை பலபடக் காணலாம்.

புராணம் என்ற மரபுக்கேற்ப ஆற்றுப் படலமாகத் தமிழ் நாட்டுள் உயர்வான தாமிரபரணி நதி, பொதியை

மலேச்சிறப்பு, வேடமகளிர் ஆடல், மேகத்தைப்பற்றிய வருணனை முதலியவற்றைக் கூறியுள்ளார். வெறும் கற்பனைக் காட்சிகளையும், வரலாற்றையும் நீட்டிக் கூறிக் கவிகளை வளர்க்க இசையாத தண்டபாணி சுவாமிகள், சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் என்ற முறையை மேற்கொள்பவர் என்பதைப் புலவர் புராண நூலிற் பலவிடங்களில் காணலாம்.

வில்லிபாரதத்தில் சுவாமிகட்கு அழுந்திய ஈடுபாடு உண்டு. இதுபற்றி ஓரிடத்தில்

மருந்துறழ் கவிஒன் றுற்பல வான்பொருள் தெரியக் கூறும்
திருந்திய பாரதச்சீர் தெரிபவர் சிலர்தாம் அம்மா

என்கிறார். பெரியாழ்வார் சருக்கத்தில் ஆண்டாளையும், சடகோபர் சருக்கத்தில் மதுரகவி ஆழ்வாரையும் இணைத்துக் கூறிய இவர், மத வேறுபாடு கருதாமல் முத்துலுக்கப் புலவர் சருக்கத்தில் இஸ்லாமியப் புலவர்களான உமறுப் புலவர், சவ்வாதுப் புலவர், சையது மொய்தீன் என்பார்கள் வரலாற்றையும் விளக்கியுள்ள பெருமை இவரது மத ஒருமைப்பாட்டை நன்கு தெளிவுபடுத்துகிறது. இதன் மூலம் சமய வேற்றுமை, இன வேற்றுமையின்றி தமிழ் மொழிப் புலமையையே குறியாக்கொண்டும், சமயபேத வாதங்களைக் கண்டித்தும், சமரசமான தெய்வபக்தி, உபாசனை இவைகளைச் சிறப்பித்தும், சீவகருணையை விளக்கியும் புலவர் புராணம் அமைந்து காணப்பெறுகிறது. மேலும் புலவர்களின் அருளியல் வரலாறுகட்கிடையே தனது உபாசனைத்திறம், அநுபவம் இவைகளையும் இடை இடையே கவிக் கூற்றாகச் சொல்லியுள்ளது வருங்காலப் புலவர்கட்கு ஊன்றுகோல் போல அமைந்திருக்கிறது. இந் நூல் முதல் நூலேயாகும். வழி நூலோ சார்பு நூலோ அல்ல

தமிழ் மொழியின் ஏற்றத்தை ஆங்காங்கும் எடுத்துக் காட்டியச் செல்வர் தமிழ் மொழியின்கண் எழுத்துகளின் அமைப்பைக் கூறும்போது தண்டமிழ் முருகப்பெருமான் திருவுருவோடு ஒப்பிட்டுக் காண்கிறார் தண்டபாணி சுவாமிகள். உயிர் எழுத்துகள் 12-ம் முருகன் தோள்கள். ஆய்த எழுத்து தோள்மீதணியும் வேலாயுதம். மெய் எழுத்துகள்

18-ம் அப்பெருமான் கண்கள். வல்லின, மெல்லின, இடையினம் என்ற இனங்களில் ஆறாகவுள்ள எழுத்துகள்போல ஆறு திருமுகங்கள் என்னும் இவ்வருமையை அகத்தியர் சருக்கத்தில்,

“ கண்ணிகர் மெய்யும் சென்னிக் கணமுறழ் சேர்க்கைச்சீரும்
திண்ணிய புயங்க ளேபோல் திகழ்தரும் உயிரும் வேறென்று
எண்ணிடற் கரிய தாகும் எஃகமும் இயலிற் காட்டும்
புண்ணிய முனிக்கோன் ”

என்று வகைப்படுத்தியருளிய அகத்தியர் பெருமையை நிலைநாட்டுகிறார் தண்டபாணி சுவாமிகள். வண்ணக் கவிகளையும் சந்தக் கவிகளையும் எளிய நிலையிற் பாடும் சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகள், கவிராஜ பண்டிதர், கந்தசாமிப்புலவர் ஆகியோர் சருக்கங்களில் வரலாற்றை மேதனினும் இனிய சந்தக்கவிகளால் பாடியுள்ள சிறப்பு எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

வானில் வெண்ணிறமாகச் செல்கிறது மேகம். பின் கடலில் நீருண்டு கருமேகமாக வருகிறது. தேவைப்படும் அளவிற்குக் கைமாறு கருதாமல் மழை பெய்கிறது. இதனை முருகனிடமுள்ள வெண்ணிறச்சேவல், மயில், பாவலர் பாடும் பாடல் இவைகளோடு ஒப்பிட்டுரைக்கிறார்.

சேவலங் கொடியாம் எனஎழுந்தகார், திரைநீர்
ஆவல் தீர்தரப் பருகலின் மயிலுருவாகி
பாவலார் தமிழெனப் பொழிமழை, என்பதாம்,

என்னே இவ்வுவமையழகு.

இவ்வாறு பல்விதத்தும் ஒப்புயர்வற்று விளங்கும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 3005 பாடலில் அருளிய புலவர் புராணம் தமிழக மக்களால் பெரிதும் போற்றப்படும் கருத்துக்கருவூலமாகும் என்றால் மிகையாகாது.

---

## * செல்வம் எது?

(தி. செ. முருகதாச சுவாமிகள்)

செல்வம் என்பது பொதுவாகப் பொருட்செல்வத்தையே குறிக்கின்றது. அது எந்நாட்டிலும் என்றும் பெரி

* 21—4—70 சான்றோர் வாக்கு.

தாக மதிக்கப்படுகிறது. ஆனால் அப்பொருளை அறிஞர் பொருட்படுத்துவதில்லை. உலகியலளவில்

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்

என்று திருவள்ளுவர் கூறினர்.

கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானேல்
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்

என்பது ஔவையார் பாடல். இது பொதுவிதி.

ஆனால், அந்தப்பொருள் ஒருவரிடமும் நிலைபெற்றிருப்பதில்லை. பொருளற்றவர் பின் ஒருகாலம் பெறலாம் என்ற கருத்தில், "பொருளற்றார் பூப்பர் ஒருகால்" என்று ஒதுக்கிக்கூறி, அருட்செல்வத்தை ஒருவன் இழப்பானேயானால் மீண்டும் பெறமுடியாதென்றே கூறிவிட்டார் திருவள்ளுவர்.

"அருட்செல்வம் செல்வத்துட் செல்வம், பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள"

என்று பொருட்செல்வத்தை குறைகூறினர். எனவே, அருட்செல்வம் உயர்வென்று கூறியதறிகிறோம். மற்றும்

"உரன்ஒருவற் குள்ள வெறுக்கைஅஃ தின்றேல் மரம்"

என்று அறிவைச் செல்வம் என்று ஓரிடத்துக் கூறினர்.

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு

என்று அடக்கத்தைச் செல்வம்போற் காக்கவேண்டும் என்றோதினர். மேலும்,

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற

என்று மக்கட்செல்வத்தைப் பாராட்டுகிறார் திருவள்ளுவர்.

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை

என்று ஊக்கத்தைச் செல்வம் என்று கூறினர். மேலும்,

ஊக்க முடைமை ஆக்கத்துக் கழகு என்றும்,
மேழிச் செல்வம் கோழை படாது

என்றும் ஔவையார் ஊக்கத்தையும், உழவினையும் செல்வமென்று சொல்லினர். ஏனென்றால் தானும் உண்டு வாழ்ந்து உலகமக்களை வாழ்வித்து, வளமுறச் செய்வது உழவு. அதற்குரியது மேழி. எனவே மேழிச்செல்வம் என்றார்.

> கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
> மாடல்ல மற்றை யவை

என்று கல்வியைச் செல்வம் என்று சிறப்பித்தனர்.

> செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
> செல்வத்துள் எல்லாம் தலை

என்று கேள்வியையும் செல்வமென்பாராயினர்.

இப்படி ஒவ்வொரு வகையில் ஒவ்வொன்றையும் செல்வமென்று பாராட்டப்படுவதால் உண்மையானதும், நிலையானதுமான செல்வம் ஒன்று நமக்கு வேண்டியிருக்கிறது. உயிருக்கு உயர்ந்த செல்வமாக மனிதப் பிறப்பையும், அதன் நல்வாழ்வுக்காக இதுவரை கூறிய செல்வம் பலவற்றையும் உதவிய ஒருவன், திருவருட் செல்வமுள்ளவனை இறைவன் ஒருவனேயாம். திருஞான சம்பந்தர் திருப்பராய்த்துறைச் சிவனை, "செல்வமல்கிய செல்வர் பராய்த்துறைச் செல்வன்" என்று கூறி, அவனைப் பாடும் பேறுபெற்ற தன்னையும் "செல்வன் ஞான சம்பந்தன்" என்று கூறுகின்றார்.

அப்பரடிகள் "திருவீரட்டானத்தெம் செல்வன்" "திருமூலட்டானத்தெம் செல்வன்" "திருவாலங்காடுறையும் செல்வர்" "திருச்சாய்க் காட்டினிதுறையும் செல்வர்" "சிவபுரத்தெம் செல்வர்" திருவே என் செல்வமே என்றெல்லாம் போற்றிப் பணிகின்றார். எல்லாச் செல்வங்களும் இறைவனே ஆகும். இவன் தரப்பட்ட திருவருட் செல்வம் பெற்றவர்கள் ஞானச்செல்வர்கள். அவர்கள் பிற செல்வத்தை விரும்பார்கள். இந்திர பதவியோ, பூவுலக அரச பதவியோ அவர்களால் கேவலமாக இகழப்படுவதாயுள்ளது. "வானேயும் பெறில் வேண்டேன் மண்ணாள்வான் மதித்தும் இரேன்" என்று கூறுவர் மணிவாசகப்பெருமான்

வேண்டாமையன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை. யாண்டும் அஃதொப்பதில்'' என்று அழுத்தம் திருத்தமாகக் குறள் கூறுகிறது. எவ்வுலகத்துமே வேண்டாமைக்கு ஒப்பான செல்வம் இல்லையென்ற அருமை பெரிதும் சிந்திக்கவுள்ளது. வேண்டும் என்ற அவாவானது எவ்வளவிருப்பினும் மேலும் ஈர்க்குந்தகையது ஆசைக்கோரளவில்லை யென்ற தொடக்கத்தில், உலகமெல்லாம் ஆளும் அரசன் அயல்நாட்டைப்பற்ற எண்ணுகிறான் கடலினைத்தாண்டிய பகுதியிலும் தன் ஆட்சியைசெலுத்த விரும்புகிறான். குபேரனைப்போல நவநிதியம் பெற்றவரும் அமைதிபெறாமல் ரசவாதம் புரிந்து பொன் சேர்க்க அவாவுகின்றனர். நூறாண்டுக்கு மேற்பட வாழ்பவரும் இறவாதிருக்க வேண்டுகின்றனர் என்பார் தாயுமான அடிகள். இவ்வளவுக்கும் மேலாக பூமியையும் கடலையும் தாண்டி, வானவெளியில் சந்திரமண்டலத்துக்கும் மனிதன் அவா நீண்டுவிட்டது. இதைத்தான் குமரகுருபரர். ''நல்குரவென்பது அவா'' எனப்படும் என்றார். இதைவிட வறுமைவேறு என்ன ? என்கிறார் அவர்.

போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து, என்பது ஒப்பற்ற பழமொழி. அன்றன்று வேலைசெய்து மாலையிற் கூலிபெற்று அதற்கேற்றவகையில் உண்டு வாழும் ஒருவனுக்கு உள்ள மனநிறைவு அரசர்கட்கோ. பெருஞ் செல்வர்கட்கோ இராது என்பது நாம் கண்டுவரும் காட்சி. பாநுகோபனைக் கொன்றுவந்து வீரவாகு தேவர் முருகப்பெருமானை வணங்கினர். மகிழ்ந்த பெருமான் உனக்கு யாது வேண்டுமென்றார்.

> கோலம் நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
> மாலயன் பெறுபதத் தையும் பொருளென மதியேன்
> மேலையிந் திரன்அர சினைக்கனவிலும் விரும்பேன்
> சாலநின் பதத்தன்பையே வேண்டுவன் தமியேன்.

என்று கேட்டார். அதுவரை அவரிடம் அன்பில்லாமலா இருந்தது ? இருப்பதுடன் மேலும் தேவை என்பதை ''சால நின்பதத்து அன்பையே வேண்டுவன்'' என்றார் என்பதையறிகிறோம். கற்றாவின் மனம்போலக் கசிந்துருகும் அன்புதவு என்கிறார் திருவாதவூரடிகள்.

"ஆசகல் கிரியா விதிப்பெறு நூல்கள் அறைந்தவாறு தினம் உணச்செய். பூசனைச்செல்வம் ஆயினும் நிறையப் பொருந்திடில் புண்படேன்" என்பர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். ஆகவே முன்னோர் யாவரும் இறை வழிபாடொன்றையே செல்வமென்று உறுதியுடன் அறுதியிட்டுக் கூறினர். ஏனெனில் உயிர்க்கு நலம்தருவது அஃதொன்றே என்பதாலாகும்.

எனவே, "செல்வம் என்பது சிந்தையின் நிறைவே—நல்சரவென்பது அவாவெனப் படுமே" என்ற குமரகுருபர அடிகள் அருள்மொழிப்படி

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்துமண் மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை இடைநடுவிற்
குறிக்கும் இச்செல்வம் சிவன்றந்தது என்ற மனநிறைவுடன்

திருவருட் செல்வனாகிய இறைவன் திருவடியினைப் போற்றும் செல்வம் உடையவராய் வாழவேண்டும். இறையருள் துணை புரிவதாக.

செல்வ நெடுமாடம் சென்றுசேண் ஓங்கிச்
செல்வம் அதுதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே.

---

## * அனுபூதிச் சிறப்பு

(தி. செ. முருகதாச சுவாமிகள்)

எல்லாம் செயல்கூடும் என்னாணை அம்பலத்தே
எல்லாம்வல் லான்தனையே ஏத்து

என்பர் வடலூர் வள்ளற்பெருமான். எல்லாம் வல்லவனாய், பேரறிவடிவாயுள்ள கடவுளை, நாம் நம் சிற்றறிவுக்கு ஏற்பவே ஏத்துதல் கூடும். அவ்வாறு ஏத்துவது நாம் நல் வாழ்வுடன் வாழ்வதற்கே என்பது ஆன்றோர் கருத்தாகும். இதனை,

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டி
சூழ்த்துமது கரமுழலும் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானும்உன்னைப் பணிகுவனே"

என்றருள்கின்றார் மணிவாசகர்.

* 28—4—70 சான்றோர் வாக்கு.

"வாயே வாழ்த்துகண்டாய், நெஞ்சே நீநினையாய்"

என்றும்,

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவன்''

என்றும் அப்பர்பெருமான் கூறுகின்றார். மேலும் வாயாக வும், மனமாகவும்கூட அப்பெருமான் விளங்குகின்றான் என விளக்குகின்றார் அவர். இதனை,

"வாயானை, மனத்தானை, மனத்துள் நின்ற கருத்தானை
கருத்தறிந்து முடிப்பான் தன்னை"

என்பதால் அறிகின்றோம். அப்பெருமானை வாழ்த்துவது என்பது, நம் முன்னோர்களான அருளாளர்கள் கூறியருளிய அருட்பெரும் பாடல்களைப் பாடித் துதி செய்வதே யாகும். அவை நமது இம்மை, மறுமை வாழ்வுக்கு நல்வழி செய்து துணைபுரிவதாகும்.

அவ்வாறு பாடித் துதி செய்யும்போது எழுத்து, சொல், பொருள் இவற்றிற் பிழையின்றியும், பொருளறிந்தும் பாடுதல் வேண்டும். "சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர்" என்ற அருள் வாக்கால் அறியலாம். முதலிற் படிக்கும்போதே பிழையறப் படித்தாலன்றி மனப்பாடம் செய்தபின் மாற்ற முடியாது. ஒரு வீடு கட்ட எண்ணினால் முதலிலேயே திட்டமிட்டு அஸ்திவாரம் எடுக்காவிட்டால், வேலை முடிந்தபின்னர் மாற்றமுடியாதது போலாகும். எனவேதான், அருணகிரி நாத சுவாமிகள், கந்தரலங்கார நூலில்,

அழித்துப் பிறக்கவொட்டா அயில்வேலன் கவியைஅன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர் ......

என்று கூறினர்.

அவ்வாறு பிழையறக்கற்று, நம் உள்ளம் அப்பாடல் களில் ஒருமித்துப் பாடும்போது உள்ளத்தில் அன்பு ஊற்றெடு யெழும். இன்பம் தானே பெருகும். இதை வடலூர் அடிகள்,

நான்கலந்து பாடுங்கால்நற் கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே

என்று கூறுவதால் அறிகிறோம். பிறர் கேட்டுப் பாராட்டு

வதற்காக, ராக, தாள, அமைப்புகளை மிகைப்படுத்தி இறைவன் திருமுன் பாடுதலின்றி "என்புருகிப் பாடுகின்றிலே" என்ற மணிமொழியை மனதுட்கொண்டு கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்து நீர் பாய நெக்குருகப் பாடுதல் வேண்டும். இதை ஒரு சிறு வரலாற்ருல் அறியலாம்

"வாக்குக்கு அருணகிரி" என்று சிறப்புப்பெற்றவர் அருணகிரிநாத சுவாமிகள், "பாடும் பணியே பணியா யருள்வாய்" என முருகப்பெருமானிடம் விண்ணப்பித்து அவனருளாலே திருப்புகழ், திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி போன்ற பல நூல்களை அவர் அருளியிருக்கின்ருர். அவற்றுள், கந்தரநுபூதி என்பது சிறந்த மந்திர நூலாக அமைந்துள்ளது. அந்த ஐம்பத் தொரு பாடலையும் தினமும் பாராயணம் புரிபவரும், ஒவ் வொரு பாடலுக்கும் தூப, தீபம் முதலியவற்ருல் வழிபடு பவரும் பலராவர்.

திருஏரகத்தை அடுத்த ஓரூரில் வாழ்பவன் ஒருவன், வயிற்றுவலியால் அவதிப்பட்டான் பல மருத்துவம்செய் தும் பயன் காணுமலிருந்தான். ஒரு பெரியார் இதை யறிந்து திருப்புகழ், கந்தரநுபூதி இவற்றைப் பாராயணம் செய். இந்நோய் நீங்கும் என்றனர். அதைக்கேட்டுத் தின மும் படிக்கத் தொடங்கினன். ஆனல் பாடலின் பொரு ளறியாமல் பிழை மலியப் படித்தனன். முருகன் திருவுள் ளம் இதைப் பொறுக்காமல், அவன் முன்பு தோன்றினர். "அன்பனே இவ்விதம் எனது தொண்டனை அருணகிரி யின் பாடலைப் பிழையுடன் படிக்காதே. இன்றுடன் உன் நோய் நீங்கும்" என்றருளி மறைந்தனர். நோயும் நீங்கப் பெற்ருன்.

பிழையுடன் படித்ததற்கே முருகப்பெருமான் காட்சி யும், நோய் நீக்கமும் பெற்ருன் என்ருல், அன்புடனும் பிழையின்றியும், பொருளறிந்தும் படிப்பவர்கட்கு எவ்வித மான நல்வாழ்வை முருகப்பெருமான் தருவாரோ என்ற எண்ணம் உண்டாகின்றதல்லவா.

இவ்விவரத்தை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், தாமியற்றிய புலவர் புராணத்தில் அருணகிரிநாதர் வரலாறு கூறுமுறையிற் சொல்கின்றனர்.

ஏரகத்தில் ஒருவயிற்று வலிக்காரன் திருப்புகழால் எழுத்தோ(டு) ஓசை
சோரமுறத் துதிசெய்தான், அவன்நனவிற் குகன்திகழ்ந்தென் தொண்டன்பாடற்
சீரழியேல் இன்றுடன் உன்நோய் தீர்ந்ததெனப் பகர்ந்து திருத்தி செய்தான்
சாரமுறத் துதிப்பார்க்கென் பயன்தருவாரோ உணர்மின் சகத்துள்ளோரே.

என்று அருள்கின்றார். மேலும்,

'முருகோன் அருட்வேட்டுள்ளீர். என்ன பாட்டானாலும் அவற்றுள் ஒன்றேனும் பிழையறச் சொற்று உய்குவீரே' என்று அடுத்த பாடலிற்கூறி நம்மை நல்வழிப்படுத்துகிறார் தண்டபாணி சுவாமிகள். இதனை, அருணகிரிநாத சுவாமிகள் பாடிய திருப்புகழ், கந்தரநுபூதி போன்ற திருப்பாடல்களில் ஒவ்வொன்றையாவது பிழையறச் சொல்லி முருகப் பெருமானை வணங்கி நலமடையுங்கள் என்று அறிவுறுத்துகின்றார் தண்டபாணி சுவாமிகள். ஆகவே அருணகிரிநாத சுவாமிகள் பாடலில் அவர்கள் உள்ளம் கொண்டிருந்த பற்றை அறிந்து போற்றுவோமாக.

---

## * வண்ணச்சரபர் வழங்கும் உவமைகள்

(தி. மு. சங்கரலிங்கம்)

புலவர்கள் தாங்கள் சொல்ல நினைக்கும் கருத்துகளை மற்றவர் உள்ளம் ஏற்கும் வகையில் இனிய எளிய நடையிற் கூறுவர். மக்கள் தங்களை ஆடை, ஆபரணங்களால் அலங்கரித்து மகிழ்வதைப்போலவே புலவர்கள் தாங்கள் இயற்றும் செய்யுள்களில் கருத்துக்களைமட்டும் புனையாமல் கேட்போர் மகிழத்தக்கவாறு அணிகளையும் அழகுபட அமைத்து இயற்றுவர். அவ்வாறு அமைக்கப்படும் அணிகள் பலவற்றுள் உவமையணி என்பதும் ஒன்றாகும். ஒரு

* 8—4—75 இலக்கியச் சுவடி.

பொருளின் சிறப்பைத் தெள்ளிதின் விளக்கவும், கேட்போர் வியப்பெய்தவும் உவமை அணியைப் புலவர் பெருமக்கள் பயன்படுத்துவர்.

அம்முறையில் 1839-ல் திருநெல்வேலியில் தோன்றி, இறையருள் நலம் வாய்க்கப்பெற்று, பல்லாயிரம் கவிகள் பாடி, சிவகருணை நெறியை வளர்த்து இறுதியில் 1898-ல் திருவாமாத்தூரில் சமாதிகொண்ட வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், தமது நூலில் பல உவமைகளைக் கூறிக் கருத்துகளை விளக்கியுள்ளார்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

புலவர்கள் பலர் புராணம் பல பாடினர். வண்ணச்சரபம் அவர்களோ புலவர்கட்குப் புராணம் பாடினர். அதுவே புலவர் புராணம் என்பது. இந்நூல் முன்னோர்கள் இயற்றிய காப்பியங்களைப்போலவே அமைந்துள்ளது. முதற் பகுதியாகப் பொதியாசலப்படலம் என்ற பகுதி காணப்படுகிறது அம்மலைப்பகுதியில் மேகம் உலவுவதைக் குறிப்பிடுகிறார். முதலில் மேகம் வெண்மை நிறத்திற் காணப்பட்டது. பின் அது கடலிற்சென்று நீரை முகந்து கருமேகமாக மாறியது. பின் வந்து போதிய அளவு மழையையும் தந்தது. இந்நிகழ்ச்சி முருகப்பெருமான் திருவருட் செல்வராகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் முருகனிடமுள்ள சேவல், மயில் இவைகளோடு ஒப்பிட்டுக் காண்கிறார். வெண்ணிற மேகம் சேவற் கொடி நிறத்திலிருந்ததையும், கருமேகம் மயில் வாகனம் போலிருந்ததையும் கண்டார். மழைபெய்த காட்சி புலவர்கள் கடல் மடை திறந்தாற்போலக் கவிபாடும் திறத்தையும் கண்டார். இதனை,

> சேவ லங்கொடி யாமென எழுந்தகார், திரைநீர்
> ஆவல் தீர்தரப் பருகலின் மயிலுரு வாகிப்,
> பாவ லார்தமிழ் எனப்பொழி மழைமுதற் பலவாம்
> ஒவ லின்றிய வளத்தினது உயர்புகழ்ப் பொதியை.

என்று பாடினார்.

பொதியை மலைச்சாரிலிலும், உச்சியிலும் மரம், செடி, கொடிகள் நிறைந்து ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து மந்தியும் அறியா மரம் பயில் அடுக்கமாயிருந்தது. அச்

சோலையினுட் சென்றால் வெய்யில் என்பதைச் சிறிதும் காணமுடியாது. இருளே சூழ்ந்திருக்கும். இதைக் கண்ணுற்றார் வண்ணச்சரபர். இறையருளையே எண்ணி உபாசனை செய்து அருள்பெற்ற புலவர்களின் வாக்கு, இன்பத் தேன் வந்து பாயும் திறனுடையதாய்—அருள் ஒளி செழுமியதாயிருக்கும். பிற புலவர்கள் பாடல்கள் எளிய தன்மையதாய் பெருஞ் சிறப்புகளைப் பெற்றிராமல் இருண்டு இருக்குமாம். எனவே உபாசனையில்லாத புலவர்கள் பாட்டிலுள்ள சொற்களும் நாணுமாறு சோலை இருண்டுள்ளதென்பதை

நல்லுபாசனை இன்றிய நாவலர்
சொல்லும் நாண இருண்டுள சூழல்

என்கிறார். மலைகள் பல இருந்தபோதிலும் பொதியை மலையே அவைகளில் முதன்மையானது, மேன்மையானது என்று கூறிய வண்ணச்சரபர் ஏழு உவமைகள் மூலம் சிறப்பிக்கின்றார். காமுகரிற் சிறந்த சந்திரனைப்போலவும். அன்பர்கள் கருத்தை நிறைவேற்றுவதில் சிறந்த முருகனைப் போலவும் இனிமைமிக்க பாக்களின் சுவையிலும், கலை வளர்ச்சியிலும் சிறந்த தமிழ்மொழியைப்போலவும், அடியவர்கள் வேண்டியதை வேண்டியாங்கு தடையற அருள்வதிற் சிறந்த சிவனைப்போலவும், தன்னையொப்பான வேலாயுதம் இல்லை என்னும் வேலாயுதத்தைப்போலவும், கொடிகள் பலவற்றிலும் வெற்றி நலமிக்க சேவற்கொடியைப்போலவும், முனிபுங்கவர்களில் அகத்தியமாமுனிவரைப்போலவும், மலைகள் பலவற்றினும் சீர்சான்று விளங்குவது பொதியை மலையேயாகும் என்பதை,

காமுகரிற் சசிபோலும், கடவுளரிற்
குகன்போலும், கவிஞர் தீஞ்சொற்
பாமுதிர்பல் கலைப்பெருக்கிற் றமிழ்போலும்
கொடைநலத்திற் பரமன் போலும்
தீமுனையா யுதத்திரளில் வேல்போலும்
பதாகைகளிற் சேவல் போலும்
மாமுனிவர் குலத்தில்அகத் தியன்போலும்
மலையினத்தில் மலயம் மாதோ

என்ற பாடலில் தெளிவாக்குகின்றார்.

திருவாமாத்தூர் நடுநாட்டுச் சிவ தலங்களுள் ஒன்றாகும். அத்தலத்திற்குத் தலபுராணம் பாடினார். வடமொழி ஸ்காந்தத்தில் நாகர காண்டத்தில் கூறப்படும் திரு ஆமாத்தூர்த் தல புராணத்தை ஆயிரம் பைந்தமிழ்ப் பாக்களில் வண்ணச்சரபர் மொழி பெயர்த்துப் பாடியுள்ளார். அந்நூலில் அவ்வூர்ச் சிறப்பை முதற்கவியில் அமைத்துள்ளார்.

முதல் ஒலியல் அந்தாதி என்பது அழகுமிக்க சந்த யாப்பில் யாக்கப்படும் நூல். இது தமிழிலக்கியங்களிலே முதன்மையானது. ஆதலால் இந்நூலையும், ஆன்மாக்கள் பக்குவமுணர்ந்து அருள்புரிவதில் சிறந்தவர் சிவ பெருமான். எனவே சிவபெருமானையும், மக்கள் மேற்கொள்ளவேண்டிய அறநெறிகளுள் சிவகருணைப் பொரு நெறியே மேலானது. எனவே அந்நெறியையும் போன்றது திருவாமாத்தூர் என்கிறார் வண்ணச்சரபர்.

முத்தமிழ்ப் பனுவற் கூட்டில் முதலொலி யல்அந்தா திக்கே
ஒத்தது; தெய்வங் கட்குள் உமைகண வனேயே போன்றது
உத்தம நெறிகள் தம்முள் உயிர்கொலா விரதம் ஏய்த்தது
அத்தமா தியமுச் சீரும் அவிர்தரு திருவா மாத்தூர்

என்று தலபுராணத்தில் மூன்று உவமைகள் மூலம் விளக்குவது போற்றத்தக்கதாயுள்ளது. மேலும் திருவாமாத்தூர் நகரச் சிறப்பினைப் பலவகையில் பாராட்டிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் மதிலின் சிறப்பினை நல்லதோர் உவமைமூலம் கூறி மகிழ்கிறார்.

திருவாமாத்தூரைச் சுற்றிலுமுள்ள மதில் விண்ணைத் தொடுமளவிற்கு உயர்ந்து காணப்படுகிறது இவ்வுயர்வை எதனோடு உவமிக்கலாம் என்று சிறிது சிந்தித்தார். திருவருட்பாங்கு அவரை உந்தவே இராமாயண காவியத்தின் உயர்வை உன்னி அதனோடு ஒப்பிட்டார்,

மாதை நாதர் வான்மதில் வான்தொடல்
ஏதை ஒக்கும் எனச்சிறி தெண்ணிடில்
சீதை கேள்வனும் தேனுவும் சீர்பெறும்
காதை மான்மியம் என்னக் கவின்றதே

என்கிறார். மேலும் அந்நகரில் நான்கு அரண்களைக் காண்கிறார் வண்ணச்சரபர். நால் அரண்களும் சமயாச்சாரியர்

நால்வரையும் நினைவூட்டியது. நால்வர்கள் சிறப்பை நினைவூட்டிக்கொண்ட அவர். மணிவாசகர் அன்பும், அப்பரடிகள் அடிமைத்தொண்டும், சம்பந்தர் வீரமும், சுந்தரர் இன்பியலும் போல உள்ளன என்பதை

வாத வூர்முனி அன்பும் நல் வாக்கிறை
தாத மார்க்கமும் சம்பந்தர் ஆண்மையும்
போதச் சுந்தரர் போகமும் பூகர்சூழ்
நாதர் மாதையில் நால்அரண் போல்பவே.

என்று குறிப்பிடுகிறார்.

திருவாமாத்தூரைச் சுற்றிலுமுள்ள அகழியில் நீர் நிறைந்துள்ளது. செந்தாமரை மலர் பல பூத்துள்ளன. அம்மலர்கள் மீது சிவந்த கால்களையுடைய அன்னப்பறவைகள் அமர்ந்துள்ளன. இக்காட்சியை அகழிநீரைத் திருமால் மார்பு நிறத்துக்கும், செந்தாமரை மலர்களைத் திருமகளுக்கும் ஒப்பிட்டு

அங்கணார் மாதைசூழ் அகழி மேல்மலர்
செங்கம லத்திரட் செறிசெங் கால்அனம்
துங்கமா யவன்உரம் தோய்ந்து நீங்கலா
மங்களம் மலிதிரு மகளிர் போன்றவே.

என்று அழகு நலம் தோன்றக் கூறுகிறார்.

முருகனின் வற்றாக் கருணைநலம் மேவிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் தாய் மொழியாம் தமிழிலுள்ள எழுத்துகள் சிலவற்றையும் தம் வழிபடு மூர்த்தமாகிய முருகனையும் ஒப்பிட்டுக் காண்கிறார்.

தமிழ் எழுத்தில் மெய் எழுத்து பதினெட்டு இருப்பது போல, முருகனுக்குக் கண்கள் பதினெட்டு உள்ளன எனவும், வல்லின, மெல்லின, இடையினங்களில் ஆறு எழுத்துகள் இருப்பதுபோல, முடிகள் ஆறுள்ளன எனவும், உயிர் எழுத்துகள் பன்னிரண்டிருப்பதுபோலத் தடந்தோள்கள் பன்னிரண்டுள்ளன எனவும், எழுத்துக்களில் ஆய்த எழுத்து சிறந்திருப்பதுபோல, ஆயுதங்களில் மேலான வேலாயுதத்தை முருகன் அணிந்துள்ளான் எனவும் நம்மவர் உய்த்துணர,

கண்ணிகர் மெய்யும், சென்னிக் கணமுறழ் சேர்க்கைச் சீரும்
திண்ணிய புயங்க ளேபோற் றிகழ்தரும் உயிரும் வேறென்று
எண்ணிடற் கரிய தாகும் எஃகமும் இயலிற் காட்டும்

என்று கூறியுள்ளது சிந்தைக்கு விருந்தாகவுள்ளது.

பழனி மலைமீது வெண் சேவற்கொடி பறக்கிறது. பறக்கின்ற காட்சி வருக வருக என அழைப்பதைப்போல காணப்படுகிறது. வருக என்பது நம்மைமட்டும் அல்ல. மேகத்தில் ஏறுவாகிைய இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்து நீங்கள் அஞ்சாமல் வாருங்கள். கொடிய அரக்கர் குலத்தவரால் உங்கட்குத் தீங்கேதும் ஏற்படாவண்ணம் குஞ்சரி கேள்வனாகிய எம் தலைவன் காப்பாற்றுவான் என்று கூறிக் கைகாட்டி அழைப்பதைப் போன்றுள்ளதாம்.

மஞ்சேறு வான்முதற் றேவர்எல் லோரையும் வன்தகுவர்க்கு
அஞ்சேன்மின் வம்மின் எனக்கரங் காட்டி அழைப்பதொக்கும்
பஞ்சேயும் மெல்லடிக் குஞ்சரி கேள்வன் பழனிவெற்பிற்
செஞ்சேவற் கோலம் வரைதரு சேவல் திருக்கொடியே.

என்று பாடுகிறார் வண்ணச்சரபர்.

அருணகிரிநாத சுவாமிகளுடன் வாதஞ்செய்த சம்பந்தாண்டான் சமணர் குலத்தில் பிறந்தவன். சமணர்கட்கு எதிரியாக விளங்கியும், சைவ சமயாச்சாரியர்களில் ஒருவராகத் திகழ்ந்து சிறந்த சம்பந்தப்பெருமான் திருப்பெயரை, சமணக்குலத்திலே தோன்றிய இவன் சம்பந்தாண்டான் என வைத்திருப்பது ஆட்டுக்குட்டி ஒன்று வேங்கைப் புலி என்று தன்னைச் சொல்லிக்கொள்வதைப் போன்றுள்ளதென்பதை,

சமணரும் அவன்முன் னாளில் தன்னெறித் தலைவர் தம்மைத்
தமரொடு கழுவி லேற்றிச் சைவரைப் புரந்து ளான்றன்
விமலமாந் திருப்பேர் கொள்ளல் மெல்லிய மேடக் கன்று
சமரவல் வேங்கை நாமம் தனைக்கொளல் போன்ற தன்றே

என்று சம்பந்தரைப் புலிக்கும், சம்பந்தாண்டானை ஆட்டுக் குட்டிக்கும் அருணகிரிநாதர் புராணத்தில் உவமித்த நயம் வியக்கத்தக்கதாகும்.

அத்தகைய சம்பந்தாண்டான் அம்பிகையை உபாசித்து வரலானான். தாயாகிய அம்பிகை இவன் வேண்டுகோளுக்

கிரங்கி உண்மை ஞானத்தை அருளாமலும், அவனிடமுள்ள தீய குணத்தை நீக்காமலும் தனக்குரிய மந்திரத்தைச் செபித்ததால் உண்டாகும் பயனைமட்டும் அருளினள். கண்டதே காட்சி கொண்டதே கோலம் எனும் சம்பந்தாண்டான் தன் வேண்டுகோளுக்கிரங்கி அம்பிகை அருள் செய்தாள் என்று உவப்புற்றான். இதனை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், அமுதம் உதவும் பெருங்கடலின் அருமை பெருமை உணராமல் சிறு பூனையொன்று கடலின் நீரைக் குடிக்கமுன்னரே, முழுமையும் குடித்துவிட்டோம் என்று மகிழ்ந்ததுபோலுள்ளது என்பதை,

எத்தனைபேறும் நல்கும் எழிற்பரை அருள்விலாசம்
அத்தனைத் தானென் றெண்ணி அளப்பரும் களிப்பன் ஆனான்
புத்தமிழ் துதவும் தீம்பாற் புணரியைப் பூனை காணின்
மொத்தமும் குடியா முன்னம் திருத்தியின் மூழ்கு மாபோல்

என்ற பாடலிற் குறிப்பிடுகிறார்.

இவைபோன்று பற்பல உவமைகள் மூலம் அரிய கருத்துக்களைத் தமது நூல்களில் பலவிடங்களில் விளக்கியுள்ளார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். எனவே வண்ணச்சரபம் வழங்கிய உவமைகளை எண்ணி மகிழ்ந்தின்புறுவோமாக.

## துதிப்பாடல்.

எத்தங் புராண சரிதமும் தேனும் இயல்புடையோர்
சொந்தக் குழுவில் தமியேன்உன் மேன்மை சொலப்புரிவாய்!
சந்தப் பொழில்செறி மாதைப் பதியிற் கவிக்கரசாம்
சந்தத் தமிழ்த்தண்ட பாணிஎன் றோங்கிய சற்குருவே.

—சந்தப்புலமை செந்தினாயக அடிகளார்.

தெய்வமே துணை.